# வானியல் மூலம் வரலாறு காண்போம்



















ஆசிரியர் நா. பொ. இராமதுரை




Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books
and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# VEDIC CALENDAR

| | |
|---|---|
| 12 Lunations with addl. one 13 Lunations | 1 Luni Solar Year |
| 5 Luni - Solar Years<br>i. Samvatsara (Agni)<br>ii. Pariyatsara (Sun)<br>iii. Idavatsara (Moon)<br>iv. Anuvatsara (Prajapathi)<br>v. Udavatsara (Rudra) | 1 Vedanga Jyotisha Yuga |
| 32 Vedanga Jyotisha Yugas | = 1 Magha Cycle (160 Years) |
| 76 Magha Cycles | = 1 Maha Yuga(12160 Years) |
| 1 Maha Yuga | = Day of Brahma |
| 1 Maha Yuga | = Night of Brahma |
| Both 2 Maha Yugas | = One full day of Brahma ie (one procession cycle of 24320 years) |
| 72 Maha Yugas | = 1 Manvantra |
| 14 Manvantras | = 1 Kalpa (1008 Maha yugas) |
| 6 Kalpas | = 1 Pralaya |
| 3 Pralayas | = 1 Maha Pralaya |
| 27 Maha Pralayas | = Age of Earth (5957038080 Years) |

## MAHA YUGA

| Sl. No. | Name of Yuga | Yuga Years | Yugasandhi Years | Total Years | Total No. of Days |
|---|---|---|---|---|---|
| 1. | Krutha Yuga | 4800 | 64 | 4864 | 1776606 |
| 2. | Thretha Yuga | 3600 | 48 | 3648 | 1332455 |
| 3. | Dwapara Yuga | 2400 | 32 | 2432 | 888303 |
| 4. | Kali Yuga | 1200 | 16 | 1216 | 444152 |
| | *Total* | 12000 | 160 | 12160 | 4441516 |

## ASTRONOMICAL CONSTANTS

| | | |
|---|---|---|
| 1 Sidereal Year | 365.25625 | days |
| 1 Lunation | 29.530571 | days |
| 1 Sidereal period of Moon | 27.32164563 | days |
| 27 Yogas | 25.42018269 | days |
| Precession for One Year | 53.289473" | |

***Saptha Rishis stay in each star only 81 years***

# வானியல் மூலம் வரலாறு காண்போம்



## கடவுள் துதி

உருவமொன் றில்லாய் உலகெலாம் நிறைந்தாய்
நெருப்பினும் நெகிழாய் நீரினும் நனையாய்
கருப்பொரு ளாவாய்க் காலமுங் கடந்தாய்
விருப்பொடு நினைப்பவர்க் கருள்வாய் சரணம்.

## விநாயகர் துதி

மூல முதல்வனே முக்கண்ணான் தன்மகனே
வேல னுடன்பிறந்த வித்தகனே – ஞாலமிசை,
மன்னுபுகழ் பாரதத்தின் வரலாற்றை யான்கணிக்க
என்னி தயத் துள்ளிருப்பாய் நீ.

## தமிழ்த்தாய் வாழ்த்து

கலைகளெலாம் நிறைந்த மொழி
பலவுலகில் நிலவினு மோர்
நிலைகுலையா தழகு மிகு
இலக்கணமோ டிலக்கிய மும்
அலை அலையாய்ச் சொற்க ளினை
அள்ளிஅள்ளிப் பருகு தற்கு
மலைமலையாய்க் குவிந்துள நம்
தமிழ்த்தாயின் அடிபணி வோம்.

## இறைவன் ஒருவனே

இராமனவன் நாமம் சொல்லி நாமும் வாழ்வோம் – அவனும்
இருந்த இந்தக் காலத்தை ஏத்திப் புகழ்வோம்
பூவுலகில் இயேசுநாதர் புகழைப் பேசுவோம் – நல்ல
நபிகள் தந்த திருக்குரானை நாளும் படிப்போம்
எம்மதமும் சம்மதமே என்று இருப்போம் – உலகில்
இறைவனவன் அனைவருக்கும் ஒன்று என்போமே !




# வானியல் மூலம் வரலாறு காண்போம்

## ஸ்ரீ முருகன்
## ஸ்ரீ இராமன்
## கிருஷ்ணன்

ஆகிய இம் மூவரும்
வரலாற்று நாயகர்களே

*இன்று நாம் வசிப்பது*
*கலியுகமல்ல*
*திரேதாயுகமே*

நா. பொ. இராமதுரை

## ஆசிரியர் பற்றிய குறிப்புகள்

| | | |
|---|---|---|
| ஆசிரியர் பெயர் | : | **நா.பொ. இராமதுரை,** |
| சொந்த ஊர் | : | நாட்டாணி கிராமம், |
| வந்த ஊர் | : | கண்டமங்கலம் கிராமம், |
| மாவட்டம் | : | தஞ்சாவூர், |
| பிறந்த நாள் | : | **22-02-1928 கும்பமாசி 10 பிரபவ ஆண்டு,** |
| தந்தை பெயர் | : | திரு. கோ. பொன்னுசாமி சேர்வை, |
| தாயார் பெயர் | : | திருமதி. பாப்பம்மாள், |
| மனைவி பெயர் | : | திருமதி. இராசாமணி அம்மாள். |

### முகவரி

**நா. பொ. இராமதுரை,**
6/10, சாலைத்தெரு,
கண்டமங்கலம் அஞ்சல்,
தஞ்சாவூர் மாவட்டம் – 613 104,
தமிழ்நாடு,
தென் இந்தியா.

### நூலைப் பற்றிய குறிப்புகள்


| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | பிப்ரவரி 2000, |
| உரிமை | : | ஆசிரியருக்கு மட்டும், |
| தாள் | : | 13.7 சேஷாயி |
| விலை | : | ரூ. 25.00 |
| பக்கம் | : | 112 |
| அச்சகம் | : | **சந்திரோதயம் ஆப்செட் பிரிண்டர்ஸ்,** திருச்சிராப்பள்ளி – 620 008. |


## வானியல் மூலம் வரலாறு காண்போம்

*எனது இந்த ஆய்வு நூலுக்கு வித்திட்டு உரமிட்டோர் பலர் என்றாலும் என்னைப் பெரிதும் ஊக்குவித்து நீர்பாய்ச்சி செடியாகி மரமாகி அது பூத்துப் பிஞ்சாகி பின்காயாகி கனியாக்குவித்தப் பெருமை*

அருட்செல்வர்

பொள்ளாச்சி. டாக்டர். **நா. மகாலிங்கம்**

அவர்களுக்கே

***உரித்தாம் என்பதால்***

***இந்நூல் அன்னாருக்கே***

***காணிக்கையாம்***

## ஆசிரியர் முன்னுரை

எனது படிப்பைத் திருக்காட்டுப்பள்ளி **சர்.பி.எஸ். சிவசாமி ஐயர்** உயர் நிலைப்பள்ளியில் 1946ல் எஸ்.எஸ்.எல்.சி.யுடன் முடித்துக் கொண்டு, பத்திரப் பதிவுத்துறையில் பல்லாண்டு காலம் இளநிலை உதவியாளராகவும், உதவியாளராகவும் பணியாற்றி இறுதியாக 1980ல் சார்-பதிவாளராகப் பதவி உயர்வில் சுமார் நான்காண்டு காலம் பணிபுரிந்து 28-02-1985ல் ஓய்வு பெற்றேன்.

சென்னை எத்திராஜ் கலைக் கல்லூரியும் வரலாற்றுப் பேரவையும் ஒன்று சேர்ந்து 1979ல் அருட்செல்வர் பொள்ளாச்சி டாக்டர். நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் நம் பாரத தேசத்து வரலாற்றில் வைவஸ்வதமனுவால் தொடங்கப்பட்டதாகவுள்ள **சப்தரிஷி சகாப்தத்தின்** ஆரம்பம், **இராமாயண காலம், இராம-இராவணப் போர்**, மகாபாரத **காலம்**, மகாபாரதப் போர், **கலியுக ஆரம்பம்** ஆகியவற்றின் உண்மையான காலம் பற்றி அறிய நடந்த கருத்தரங்கில், திரு. கே. சீனிவாசராகவன், திரு. வி.ஜி. ராமச்சந்திரன், திரு. ஜி. சம்பத் ஐயங்கார், திரு. ஜி. எஸ். சேஷகிரி, டாக்டர் ஆர். நாகசாமி, திரு. வி.சி. குழந்தைசாமி, திரு. கே.ஜி. கிருஷ்ணன், சுவாமி சாக்கியானந்தா பேராசிரியர் இரா. மதிவாணன் இன்னும் பல பேரறிஞர்களால் வழங்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளடங்கியதும் "Mythology to History Through Astronomy" என்ற தலைப்பிட்டதுமான 1980ல் பொள்ளாச்சியில் அச்சிடப் பெற்ற ஒரு புத்தகத்தை எனது பள்ளி நண்பர்களில் ஒருவரான **திரு. என். சந்திரசேகரன்** அவர்கள் 1987 வாக்கில் என்னிடம் தந்தார்.

எனக்கு ஏழு அல்லது எட்டு வயது இருக்கும் போது எங்கள் ஊர்ப் பெரியவர்களில் ஒருவரான **திரு. கருப்பையக் காடவராயர்** அவர்கள் தினமும் இரவு ஆகாரம் முடிந்தவுடன் 8 மணிமுதல் சுமார் 10 மணிவரை, சில சமயங்களில் இரவுமணி 12 வரையிலுங்கூட இராமாயணத்தையும், அது முடிந்து மகாபாரதத்தையும் ஆதியோடந்தமாக சுமார் நான்கு அல்லது ஐந்து மாத கால அவகாசத்தில் அவர் கதையாகச் சொல்ல, நான் செவிமடுத்து



ரசித்துக்கேட்டு ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் முறையே அவ்விரு காவியங்களின் வரலாற்று நாயகர்களே என எண்ணி இறுமாந்து இருந்த எனக்கு, பிற்காலத்தில் நான் பத்தாம் வகுப்பு படிக்கும் போது நான் படித்த இந்திய தேச வரலாற்றில் ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் இடம் பெறாதது கண்டு ஏக்கப் பெருமூச்சு விட்டவனானேன்.

அவ்வாறு இடம் பெறாது போனமைக்குக் காரணமாக நம் தேச நலன் கருதி மக்களை நல்வழிப்படுத்தி இந்து கலாச்சாரம் சீர் கேடுறாவண்ணம், வால்மீகி முனிவரால் ஸ்ரீ ராமனை கதாநாயகனாகக் கொண்டு இராமாயணமும், வியாச முனிவரால் ஸ்ரீ கிருஷ்ணனை கதாநாயகனாகக் கொண்டு மகாபாரதமும் படைக்கப்பட்டதாக பலரும் கூற, அதுவும் உண்மையாக விருக்கலாமோவென எண்ணிவிட்ட எனக்கு, அப்புத்தகத்தில் திரு. கே. சீனிவாசராகவன் அவர்கள் தனது கட்டுரையில் சப்தரிஷி சகாப்தத் தொடக்கம் கி.மு. 8576 என்றும், ஸ்ரீ ராமன் தோன்றியது கி.மு. 4439 என்றும் ஸ்ரீ கிருஷ்ணன் தோன்றியது கி.மு. 3112 என்றும், மகாபாரதப் போர் தொடக்கம் கி.மு. 3067 என்றும் குறிப்பிட்டு ஸ்ரீ ராமன் ஸ்ரீ கிருஷ்ணன் ஆகிய இருவர்களின் ஜனனகால இராசிச் சக்கரங்களையும் கணித்துக் கொடுத்ததைக் கண்ணுற்றுப் படித்துப் பார்த்த எனக்கு, உள்ளபடியே ஓர் எல்லையற்ற மகிழ்ச்சி என் மனதின்கண் நிறைந்து வழியலாயிற்று.

அப்போதுதான், சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் **திரு. கருப்பையக் காடவராயர்**, தன் வீட்டுத் திண்ணையில் ஒரு கயற்றுக் கட்டிலில்படுத்துக் கொண்டு இராமாயணத்தையும், மகாபாரதத்தையும் உண்மையில் நடந்தது போல் கூறிய பாங்கும், அத் திண்ணையில் அவரருகில் ஒரு கம்பத்தில் சாய்ந்தவாறு கண்துஞ்சாது கேட்டு ரசித்த தன்மையும் வீண்போகவில்லை என்ற எண்ணத்தைத் திண்ணமாகக் கொண்ட நான், அன்று முதல் அப்புத்தகத்தை அல்லும் பகலும் அயராது துருவித் துருவி படித்த பின்னர் தான், நம் மகரிஷிகள் காலங்காலமாய் ஆய்ந்து வேதங்களில் வேதாங்க சோதிஷா மூலம் தந்துள்ள வானியல் அளவுகளை இன்று வரை நம்

நாட்டு மேல் நாட்டு வானியல் வல்லுனர்கள் குறிப்பாக திரு. கே. சீனிவாச ராகவன் அவர்கள் கூட, புரிந்து செயல்படத் தவறியுள்ளார்கள் என்பதைத் தேர்ந்து தெளியலானேன்.

அத் தெளிவின் மூலமாகத்தான் **ஸ்ரீ ராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும்** ஏன்? **ஸ்ரீ முருகன்,** கூட நம் பாரத பூமியில் அவரவர்களுக்குரிய காலகட்டத்தில் அவதரித்து துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிந்து மறைந்துவிட்ட அவதார புருஷர்களே என்பதை உறுதி செய்து கொண்டு, இந்த **"வானியல் மூலம் வரலாறு காண்போம் "** என்ற நூலை எழுதத்தலைப்பட்டேன்.

நான் வானியலைப் படித்தவனுமல்ல. அதே சமயத்தில் யாரிடமும் பயின்றவனுமல்ல என்பதால், போன சென்மத்தில் தொட்டுவிட்டதைத்தான் இந்த சென்மத்தில் தொடர்ந்து ஆராயத் தொடங்கி இருப்பேனோ என்னவோ! என எண்ணுகிறேன்.

அப்புத்தகத்தில் சுவாமி சாக்யானந்தா அவர்களின் கட்டுரையில் சுவாமி விவேகானந்தர் கூறியுள்ள அறிவுரைகளை சிரமேற்கொண்டு இடையறா எண்ண ஆற்றலுக்கு எதுவும் சாத்தியமே என்ற வள்ளுவர் வாக்கை உறுதுணையாக்கி நான் எடுத்துக்கொண்ட அயரா முயற்சியில் ஸ்ரீ கிருஷ்ணன் பகவத் கீதையில் கூறும் ஒரு மகாயுகம் 12160 ஆண்டுகள் தான் என்பதையும், அதுதான் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களுக்கும் 4:3:2:1 என்ற விகிதத்தில் பகிர்ந்தளிக்கப் பட்டிருக்க இயலும் என்ற முடிவுக்கும் வந்தவனானேன்.

அனைத்துக் கோள்களையும் ஆரம்பமாகும் அதே நிலைக்கு மீண்டும் கொண்டு வந்து நிலை நிறுத்தும் பாங்கை, ஒரு மகாயுகம் பெறுவது போன்றே, திதி நட்சத்திரம் யோகம் ஆகிய மூன்றையும் ஆரம்பமாகும் அதே நிலைக்கு மீண்டும் கொண்டு வந்து நிலைநிறுத்தும் செயலை 160 ஆண்டுகள் கொண்டு ஒரு



மாகசைக்கிள் வகிக்கின்றதென்ற உண்மையையும் உணரலானேன்.

இந்த நியதி அனுஷ்டிக்கப் படாததால்தான் சுவையுள்ள வானியல்கலை சுவையற்றதாகியுள்ளது என்பதும் புலனாயிற்று.

அதன் பின் மாகசைக்கிள் என்பது சௌரமான ரீதியில் தமிழ் கும்பமாசி முதல் நாளினின்றும், சாந்திரமான ரீதியில் மாகசுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினத்திலும் சம்வத்ஸரா ஆண்டாக ஆரம்பமாவதையும், அது 160 ஆண்டுகளுக்குப்பின் சௌரமான ரீதியில் தமிழ் மகர தை கடைசி நாளாகவும், சாந்திரமான ரீதியில் ஓர் பௌஷ அமாவாசை திதியுடன் உடவத்ஸரா ஆண்டாகவும் முடிவதையும் அறியலானேன்.

எனவே இது போன்ற 76 மாகசைக்கிள்கள் கொண்ட 12160 ஆண்டுகளையுடைய ஒரு மகாயுகத்தின் ஆரம்பமும் முடிவும், அத்தகையதே என்று முடிவுக்கும் வந்தவனானேன்.

அதன்பின் 12 சாந்திரமான மாதங்கள், சில சமயங்களில் ஒரு கூடுதல் மாதத்தைப் பெற்று 13 சாந்திரமான மாதங்கள், ஒரு சாந்திரமான ஆண்டாம் என்பதையும், இது போன்ற 5 சாந்திரமான ஆண்டுகள் ஒரு வேதாங்க சோதிஷா யுகா என்பதையும், இது போன்ற 32 வேதாங்க சோதிஷா யுகாக்கள் தான் ஒரு மாக சைக்கிள் என்பதையும், இது போன்ற 76 மாக சைக்கிள்கள் ஒரு மகாயுகம் என்பதையும் இது போன்ற இரு மாகயுகங்கள் தான் அயனாகிய பிர்மாவுக்கு ஒரு நாள் என்பதையும், இது போன்ற 36 நாட்கள் கொண்ட 72 மகாயுகங்கள் தான் ஒரு மன்வந்தரம் என்பதையும், இது போன்ற 14 மன்வந்தரங்கள் கொண்டதுதான் ஒரு கல்பம் என்பதையும் இது போன்ற 6 கல்பங்கள் கொண்டது தான் ஒரு பிரளயம் என்பதையும் இது போன்ற 3 பிரளயங்கள் கொண்டது தான் ஒரு மகாபிரளயம் என்பதையும் இதுபோன்ற 27 மகாபிரளயங்கள் கொண்டதுதான் பிர்மாவின் வயதாம் (பூமியின் வயது) என்பதையும் நம் மகரிஷிகள் நிர்ணயித்துக் கொண்டிருக்க முடியுமென்ற உண்மையையும் அறியலானேன்.

இதினின்று பிர்மாவின் வயது 595 கோடியே 70 லட்சத்து 38 ஆயிரத்து 80 ஆண்டுளோம் என்பதையும் அறிய முடிந்தது.

அதன்பின் புராணங்கள் தரும் கூற்றினைக் கொண்டும், கல்வெட்டுக் குறிப்புகளைக் கொண்டும், சப்தரிஷிகள் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் சரியாக 81 ஆண்டுகள் வீதம் இருந்து பின்நோக்கி நகர்ந்து அடுத்த நட்சத்திரத்தில் பிரவேசித்து இது போன்று 27 நட்சத்திரங்களைக் கடந்து ஒரு முழுச் சுற்றினை முடிக்க 2187 ஆண்டுகளை எடுத்துக் கொள்ளும் உண்மையையும் அறியமுடிந்தது.

இந்த அனைத்து அளவுகளுக்கும் ஆதாரமாகத் திகழ்வது ஒரு ஆண்டிற்குரிய உண்மையான அளவு 365.25625 நாட்கள், அதாவது 365 நாட்கள் 6 மணி 9 நிமிடங்கள், அல்லது 365 நாட்கள் 15 நாழி 22 விநாடி 30 விகலைகள்தான் என்பதும் உறுதியெனப்பட்டது.

நான் மேற்கூறிய அனைத்தையும் நிர்ணயித்துக்கொண்டு மேல்நோக்கிக் கணக்கிட்ட போது வைவஸ்வதமனுவால் தொடங்கப்பட்ட சப்தரிஷி ஆண்டுத் தொடக்கம் பிர்மாவின் இராப்பொழுதான 28வது மகாயுகத்தில் முதல் யுகமான கிருதயுகம் என்பதையும், அது கி.மு. **13.10.15261 வெள்ளிக்கிழமை** தமிழ் சார்வரி ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங் கூடிய தினத்தில் சரத்ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கியுள்ள தென்பதையும், அக் கிருதயுகத்தில் மச்சம், கூர்மம், வராகம், வாமனம், நரசிம்மம் போன்ற அவதாரங்கள் நிகழ, பின்வரும் திரேதாயுகத்தில் **ஸ்ரீ ராமன்** கி.மு. 17.1.10205 **திங்கள்கிழமை** தமிழ் நள ஆண்டு மேஷ சித்திரை 6 ஆம் நாள் புனர்பூசம் நட்சத்திரமும் சைத்ர சுக்ல அஷ்டமி பின் நவமி திதியுடன் கூடிய தினத்தில் அயோத்தியில் பகல்மணி 12 அளவில் ஜனனமானதையும், அத் திரேதாயுகம் முடிந்து பின்னுள்ள துவாபரயுகமும் முடிந்து **கி.மு. 20.12.4317 வெள்ளிக்கிழமை** தமிழ் ரக்தாக்ஷி ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக



பகுள சதுர்த்தி திதியும் உத்திர பல்குனி நட்சத்திரமும் கூடிய தினத்தில் தான் 28வது மகாயுகத்தின் கடைசியுகமான **கலியுகம்** ஆரம்பமாகியுள்ள தென்பதையும் அறியமுடிந்தது.

இந்த கலியுகத்தில் முதல் 5 ஆழ்வார்கள் தோன்ற அதன்பின் அக் கலியுகத்தில் 1132 ஆம் ஆண்டிற்குரிய **கி.மு. 23.7.3185 புதன்கிழமை** தமிழ் நள ஆண்டு சிம்ம ஆவணித் திங்கள் 24ஆம் நாள் பாத்ரபத பகுள அஷ்டமி திதியும் ரோகிணி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் இரவு மணி 12க்கு **ஸ்ரீ கிருஷ்ணன்** கலியுக அவதார புருஷராக மதுராவில் அவதரித்துள்ளதாகவும் அறிய முடிந்தது.

அவர் தனது 31 ஆம் வயதில் யுதிஷ்டிரரின் ராஜசூயா யாகத்தைச் சிறப்புற நடத்தி தனது 47 ஆம் வயதில் குருக்ஷேத்திரத்தில் **கி.மு.29.10.3139 வெள்ளிக்கிழமை** தமிழ் சுபகிருது ஆண்டு தனுசு மார்கழித் திங்கள் முதல் நாளன்று மகாபாரதப் போரைத் தொடர்ந்து முடித்து, பாண்டவர்களுக்கு வெற்றி தேடித்தந்து, கி.மு. 3.1.3138 திங்கள் கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கும்பமாசி 8 ஆம் நாள் மாக சுக்ல அஷ்டமி திதியும் கார்த்திகை பின் ரோகிணி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் மதியம் உத்திராயண புண்ணிய கால ஆரம்பத்தில் **பீஷ்மர்** மோட்சமடைய, அவரின் நல்லடக்கத்தை முடித்துவிட்டு ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகைக்குச் சென்று சுமார் 32 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து கி.மு. 6.2.3101 வியாழன் தமிழ் பிரமாதி ஆண்டு மீன பங்குனி 12 ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியும் உத்திர புரோஷ்டபாடா (உத்திரட்டாதி) நட்சத்திரமுங் கூடிய தினத்தில் தனது 84வது வயதில் பரமபதம் அடைய அன்றுமுதல் அவரின் ஞாபகார்த்தமாக **ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா** ஒன்று ஆரம்பமாகியுள்ளதென்பதையும் அறியலானேன்.

ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பின் அக்கலியுகத்தில் எஞ்சியது 11 சாந்திரமான மாதங்களே என்பதால், ஸ்ரீ கிருஷ்ணன் பரமபதம் அடைந்த கி.மு.6.2.3101 வியாழக்கிழமையினின்று 43 நாட்களுக்குப் பின் கி.மு. 21.3.3101 வெள்ளிக்கிழமை தமிழ் விக்ரம

ஆண்டு மேஷ சித்திரை 25ஆம் நாள் அக்கலியுகத்திலேயே நம்மாழ்வார் தோன்ற, பின் கலியுகம் கி.மு. 27.12.3101 சனிக்கிழமை தமிழ் விக்ரம ஆண்டு மகர தை கடைசி நாள் ஓர் பௌஷ அமாவாசையுடன் முடிந்துள்ளதென்பதும் உறுதியெனப்பட்டது.

இதினின்று 1979ல் சென்னையில் நடந்த கருத்தரங்கில், அனைவரும் காண விழைந்த, அனைத்துத் தேடுதல்களுக்கும் விடையாக மேலே குறிப்பிட்டுள்ளயாவும் அமையலாயின.

இவ்வாறாக 28வது மகாயுகம் கி.மு. 27.12.3101 சனிக்கிழமையுடன் **கலியுகமாக** முடிவுற, மறுநாள் கி.மு. 28.12.3101 ஞாயிறு தமிழ் விக்ரம ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக சுக்ல பிரதமை தினத்தில், வசந்த ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாக ஆரம்பமானது பிர்மாவின் பகல் பொழுதான நடப்பு 29வது மகாயுகத்தில் முதல் யுகமான **கிருதயுகமே** என்பதும் தெளிவாகியது.

இந்த கிருதயுகத்தில் கி.மு.3074 முதல் கி.மு. 2704 வரை கடைசி 6 ஆழ்வார்களின் ஜனன நாட்களை குரு பரம்பரா ஏடுகளின் வாயிலாக நாம் காண முடிகின்றது.

அதன்பின் வெள்ளம் புயல் பூகம்பம் போன்ற இயற்கை உற்பாதங்களுக்கு நம் பராத தேசம் இலக்காக, நிலைகுலைந்த பாரத பூமியில் 24வது தீர்த்தங்கரரான மகாவீரர், பின் கௌதம புத்தர் தோன்றி, ஜைன, பௌத்த மதங்களைப் பரப்ப அது அண்டை நாடுகளிலும் வேரூன்றிவிட்ட நிலையில் இந்து மதம் பொலிவிழந்து வேத புராண இதிகாசங்கள் யாவும் மக்கள் மத்தியில் மறையலாயின.

அப்போதுதான் கேரளத்தில் காலடியில் ஆதி சங்கரர் கி.மு. 2.4.509 செவ்வாய்க்கிழமை தமிழ் நந்தன ஆண்டு மேஷ சித்திரை 20 ஆம் நாள் வைசாக சுக்ல பஞ்சமி திதியும் திருவாதிரை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்து, பீடத்தமர்ந்து மீண்டும் இந்து மதம் பாரதம் எங்கும் பரவ வழி வகுத்து ஜைன பௌத்த மதங்களை மறையச் செய்துள்ளார்.



எனது கணிப்பில் பிர்மாவின் பகல் பொழுதான 27வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுகம் கி.மு. 05.10.16477 புதன்கிழமையினின்று வேதாங்க சோதிஷாப்படி ஆரம்பமாக, அக்கலியுகத்தில் ஸ்ரீ முருகன் தோன்ற அப்போது தென் தமிழகத்தில் பாண்டியர்கள் ஆட்சி புரிந்த போது அகஸ்த்தியர் தலைமையில் முதல் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட, அக்கலியுகம் யுகசந்தியுள்பட 1216 ஆண்டுகளுக்குப்பின் கி.மு. 12.10.15261 வியாழக்கிழமையுடன் முடிவுற்றதென்பது உறுதியாயிற்று.

அதற்கு மறுநாள் **கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமையினின்று** பிர்மாவின் இராப் பொழுதான 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகம் **சப்தரிஷி ஆண்டாகத் தொடங்கி** யுகசந்தியுள்பட 12160 ஆண்டுகளுக்குப்பின் கலியுகமாக கி.மு. 27.12.3101 சனிக்கிழமையுடன் முடிய, மறுநாள் கி.மு. 28.12.3101 ஞாயிற்றுக்கிழமையினின்று நடப்பு 29வது மகாயுகம் கிருதயுகமாகத் தொடங்க அக்கிருதயுகத்தில் 2592 ஆம் ஆண்டில் **கி.மு. 509ல் ஆதி சங்கரர்** தோன்ற ஆக கி.மு. 16500 முதல் கி.மு. 500 வரையுள்ள சுமார் 16 ஆயிரம் ஆண்டுகள் கொண்ட ஓர் உயரிய புராதனச் சிறப்பைப் பெற்றுள்ளது தான் நம் பாரத தேசம் என்பதற்கு இப் புத்தகத்தின் முகப்புப்படமே சான்றாம் என்பதும் உறுதியாயிற்று.

நடந்துவிட்ட தவறுகள் யாவும் நம்முடையதே தவிர நம் **மகரிஷிகளோ, வால்மீகியோ, வேத வியாசரோ** எந்தவிதமான தவறும் செய்யவில்லையென்பதும் உறுதியாயிற்று.

நாம் கி.மு. 15261 க்கும் முற்பட்ட கலியுக காலந்தான் முதல் தமிழ்ச் சங்கக் காலத் தொடக்கம் எனக் கொண்டு அதினின்று எழுத்தமைதியை வைத்துச் சங்க இலக்கியங்கள் இராமாயணம் அதன்பின் ஒரு சில சங்க இலக்கியங்கள், சித்தர் பாடல்கள், திருவாசக தேவாரங்கள் ஆழ்வார்கள் அருளிய திவ்ய பிரபந்தங்கள் மகாபாரதம் போன்ற அனைத்தையும்

வரிசைப்படுத்தி கி.மு. 2700 வரை பார்க்க வேண்டியதைவிடுத்து, சுமார் 2500 ஆண்டுகளுக்குக் கீழே கி.மு. மூன்றாம் நூற்றாண்டுதான் முதல் தமிழ்ச் சங்க காலமாக இருக்கலாம் எனக் கொண்டு அதினின்று எழுத்தமைதியை வைத்து அனைத்தையும் வரிசைப்படுத்தி கி.மு. 300 முதல் கி.பி. 900 முடியவுள்ள சுமார் 1200 ஆண்டுகளுக்குள் நம் பாரத தேசத்து வரலாற்றைக் காண முற்பட்டது ஒரு பெருந்தவறே என்பதும் தெளிவாயிற்று.

அந்த பதினாறு ஆயிரம் ஆண்டுகள் கொண்ட வரலாறு எவ்வாறு? இந்த ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குள் அடங்கும் என்பதை நாம் கிஞ்சிற்றும் சந்தேகம் கொண்டோமில்லை.

எனவே நம் பாரத தேசத்துப் புராதன வரலாறு கி.மு.16500 லிருந்தும் ஆம்; ஸ்ரீ முருகன் காலத்தில் தொடங்கப்பட்ட முதல் தமிழ்ச் சங்க காலத்தினின்று தொகுத்தெழுதப்பட வேண்டிய ஒன்றே என்பது திண்ணம்.

எனது ஆய்வுக்கு நிலையானதும், நாம் வசிக்கும் இப்பூமியிலுள்ள அனைத்து உயிரினங்களையும் ஆட்டிப் படைக்க வல்லதுமான கோள்கள், விண்மீன்கள், சப்தரிஷிகள் ஆகியவற்றின் இயக்கமே சான்றாம்.

ஆம் வானியல் கலையும் சோதிடக் கலையுமே என்பது உறுதியாம்.

என்னால் காலத்தை மட்டுந்தான் கோடிட்டுக் காட்ட முடிந்ததே தவிர ஒரு முழு வரலாற்றைத் தொகுத்தெழுத இயலவில்லை என்பதால் நான் கணித்துக் கொடுத்துள்ள காலக் குறிப்புகளை அடிப்படை ஆதாரமாகக் கொண்டு அனைத்து புராண இதிகாசங்களையும், சங்க இலக்கியங்களையும், திருவாசக தேவாரங்களையும், நாலாயிர திவ்யபிரபந்தங்களையும்,



துருவித்துருவிப்படித்து சற்றும் பொருத்தமில்லா இன்றுள்ள இந்திய தேச வரலாற்றை மறந்து ஒரு புதிய வரலாற்று நூலை தொகுத்தெழுத நம் வரலாற்றுப் பேராசிரியர்களுக்கு வேதோத்தமர்களும், சகல மடத்ததிபதிகளும், வானியல் மற்றும் சோதிடக் கலை வல்லுநர்களும் துணை நிற்கவேண்டுமென்பது எனது பணிவான வேண்டுகோள்.

நான்கு வேதங்களின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். இன்று நாம் வசிப்பது 28வது மகாயுகத்தின் கடைசியுகமான **கலியுகமல்ல.**

அதற்கடுத்த நடப்பு 29வது மகாயுகத்தின் இரண்டாவது யுகமான **திரேதாயுகமே.**

இதை மறுப்போமேயானால் வியாசர் தந்த மகாபாரதமும் குருபரம்பரா ஏடுகளும் கற்பனையாகிவிடும்.

அத்துடன் **ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும்,** கற்பனை நாயகர்களே என்ற கருத்திற்கு வித்திட்டவர்களுமாவோம் என்பது திண்ணம்.

ஸ்ரீ ராமன் வாழ்ந்த திரேதாயுகம் பிர்மாவின் இரவு. இன்று நாம் வாழும் திரேதாயுகம் பிர்மாவின் பகல்.

அப்போது சப்தரிஷிகள் பரணி நட்சத்திரத்தின் 42ஆம் ஆண்டினின்று பின் நோக்கி அசுவதி நட்சத்திரத்தில் பிரவேசித்துள்ளார்கள்.

இப்போது கி.பி. 18.04.1956 லிருந்து சப்தரிஷிகள் சித்திரையில் 32 ஆம் ஆண்டினின்று நகர்ந்து பின் நடப்பு 1999ல் சப்தரிஷிகள் ஹஸ்தம் நட்சத்திரத்தில் **70ஆம் ஆண்டில்** உள்ளார்கள்.

நாம் இன்று வராக கல்பத்தில், 8வது மன்வந்தரமான வைவஸ்வத மன்வந்தரத்தில் பிர்மாவுக்குரிய 15வது நாளில் முதல் பாதியான 29வது மகாயுகத்தில் (பிர்மாவின் பகல் பொழுதில்) 2வது யுகமான திரேதாயுகத்தில் தான் கி.பி. 9.2.1765 சனிக்கிழமை முதல் 912 ஆண்டுகள் முடிவுறும் கி.பி. 21.2.2677 புதன் முடிய முதல் பாதத்தில் வசிப்பதாகவுள்ளோம்.

இதினின்று நாம் இன்று சங்கல்பத்தில் கூறும் **"துவிதிய பரார்த்தே கலியுகே பிரதமபாதே"** என்பது பரிசீலிக்கப்பட வேண்டிய ஒன்றே என்பதாகிறது.

எனது இக்கணிப்பை ஏற்க மறுத்தால், நாம் நம் வேதங்களுக்கும் தமிழ் மொழியின் தொன்மைக்கும் பங்கம் ஏற்படுத்தி விட்டவர்களாவோம் என்பதோடு நம் பாரத மாதாவையும் தமிழன்னையையும் தலைகுனியச் செய்துவிட்ட பெருங் குற்றத்திற்கும் ஆளாவோம் என்பது உறுதி.

இந்த எனது ஆய்வுக்கு திரு. கருப்பையக் காடவராயர் வித்திட்டார் என்றாலும், அது செடியாகி வளர்வதற்கு திரு. கே. சீனிவாசராகவன் அவர்கள் தந்த ஒரு சில வேதாங்க சோதிஷா குறிப்புகளும், சுவாமி விவேகானந்தர் அவர்களின் சிறந்த அறிவுரைகளும் உரங்களாகியுள்ளன.

எனக்கு முதன் முதல் "Mythologgy to History Through Astronomy" என்ற புத்தகத்தை தந்தருளிய எனது நண்பர் **திரு. என். சந்திரசேகரன்,** அவ்வப்போது ஆதிசங்கரர் பற்றிய ஒரு சில புத்தகங்களையும், இராமாயணம், பாகவதம், விஷ்ணுபுராணம் போன்ற அரிய படைப்புகளையும் கொடுத்துதவிய நடுக்காவேரி புலவர். **திரு. எஸ். தசரதராமய்யர்,** மொழிபெயர்ப்புக்கு பெரிதும் உதவிய வரகூர் **திரு. வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர்,** சங்க இலக்கியங்கள், திருவாசகம், தேவாரம், போன்றவற்றினின்று பயனுள்ளபல குறிப்புகளைத் தந்தருளிய சாத்தனூர் நாவலர் **சி. அரசப்பனார்,** எனது கையெழுத்துப் பிரதிகளை அவ்வப்போது மனம் சலிக்காது நல்லமுறையில் தட்டச்சு செய்து கொடுத்துதவிய சக்தி தட்டச்சு பயிலக உரிமையாளர் **திரு. தி. பழனியப்பன்** ஆகிய அனைவருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

இது குறித்துப் பலவிதத்தும் துணைநின்ற சென்னை மதிப்பிற்குரிய **திரு. சி.எஸ். மகாதேவன், திரு. எஸ். குஞ்சிதபாதம்** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள கடமைப்பட்டவனாவேன்.



முதன் முதல் எனது கட்டுரையை **"உங்கள் நட்சத்திரயோகம்"** என்ற **சோதிட மாத இதழ்** மூன்றில் துணிந்து தொடர்ந்து அச்சிட்டு வாசகர்கள் மத்தியில் உலவவிட்ட அவ்விதழின் **ஆசிரியர். திரு. பி.வி. தவமணி** அவர்களுக்கு நான் பெரிதும் நன்றி சொல்லக் கடமைப்பட்டவனாவேன்.

இப்புத்தகத்தை நல்ல முறையில் அச்சிட்டு **திருச்சிராப்பள்ளி "சந்திரோதயம் ஆப்செட் பிரிண்டர்ஸ்" திரு. K.P. கோபி** அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்பதிப்பில் எனது சிற்றறிவுக்கு எட்டாது எழுத்துப் பிழையோ இலக்கணப் பிழையோ கருத்துப் பிழையோ, கணிப்புப் பிழையோ, ஏதுமிருப்பின் அதனை மன்னித்து சுட்டிக்காட்டி திருத்தம் செய்து கொள்ள ஆவன புரிய அன்புடன் வேண்டுகிறேன்.

**கண்டமங்கலம்**
**10 கும்ப மாசி 17260**
**(ஹஸ்த்தம் 69ல்)**

அன்புடன்
**நா. பொ. இராமதுரை**
**22.02.2000**

# பொருளடக்கம்

### மகாயுகம் நான்கும் அவற்றின் பிரிவுகளும்



### முக்கிய சம்பவங்களும் அவற்றின் தேதிகளும்



# வானியல் மூலம் வரலாறு காண்போம்.



## இயற்கைச் சூழலில் இமாலய வரலாறு

உலகிலேயே நீண்ட நெடிய வரலாற்றைப் பெற்றுள்ள ஒரு தேசம் உண்டென்றால் அந்தப் பெருமை நம் பாரத தேசம் ஒன்றுக்குத்தான் உண்டென்பது உறுதியாம்.

அத்தகைய உயரிய வரலாற்றைப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே நம் பாரத தேசம் பேணிப் பாதுகாத்து வந்துள்ளது.

உலகிலேயே உயரமான இமய மலையை வடக்கெல்லையாகக் கொண்டுள்ள நம் பாரத தேசம், அம்மலையினின்று உற்பத்தியாகும் சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா போன்ற பெரும் புண்ணிய நதிகளாலும், விந்திய மலையில் உற்பத்தியாகி மேற்கு நோக்கிச் சென்று அரபிக் கடலில் சங்கமமாகும் நர்மதா, தபதி போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க நதிகளாலும், மேற்குத் தொடர்ச்சி மலையினின்று உற்பத்தியாகி கிழக்கு நோக்கிச் சென்று வங்கக் கடலில் சங்கமமாகும் மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, பொன்னி நதியாம் கொள்ளிடம், காவிரி, வைகை, தாம்பிரபரணி போன்ற வற்றாத ஜீவ நதிகளாலும் நீர்வளமும், நிலவளமும் மற்றும் வனவளமும், கனிவளமும் நிரம்பப்பெற்று இயற்கையெழிலோடு இருந்து வருவது உலகறிந்த ஒன்றாம்.

அதன் காரணமாக மனித நாகரிகம் முதன்முதல் நம் இந்திய தேசத்தில் இமயமலைச் சாரலில், அதுவும் சிந்து கங்கைச் சமவெளியில்தான் தோன்றி, தெற்கே விந்திய மலையைக் கடந்து, நாளாவட்டத்தில் பல்கிப் பெருகி, மறைந்து போனதாக இன்று மதிக்கப்படுகின்ற தென் தமிழகமான லெமூரியா கண்டம் வரைப் பரவி, பின் மற்றக் கண்டங்களுக்கும் சென்றிருக்க வேண்டுமென்பது மிகத் தெளிவாம்.

அதற்கு நம் வேதங்களும் உபநிஷத்துகளும், சற்று விளக்கமாக இதிகாச புராணங்களும், சங்ககாலத் தமிழ் இலக்கியங்களும், தொன்றுதொட்டு இன்றுவரை; ஏன் ? என்றும் சான்றுகளாக இருப்பதாகின்றன.

இன்னோரன்ன காரணங்களால் இயம்புதற்கியலா இயற்கைச் சூழலில் நம் பாரத தேசம் ஓர் இமாலய வரலாற்றைப் பெற்றுள்ளதென்பது வெள்ளிடை மலையே.

## வானியல் கலையும் - சோதிடக் கலையும்

நம் பாரத தேசத்து உண்மை வர்லாற்றை மெய்ப்பிப்பதற்கு அகழ்வாராய்ச்சியில் கிடைக்கும் தொல்பொருள்களான கட்டிடச் சிதறல்களும், எலும்புத் துண்டுகளும், மண்பானை ஒடுகளும், கற்கால ஆயுதங்களும், கல் மற்றும் உலோகத்தினாலான சிலைகளும் பழங்கால நாணயங்களும், கல்வெட்டுக் குறிப்புகளும், பெரும் பயன் தருவது உண்மையே என்றாலும், அவை அனைத்திற்கும் மேலாக அளப்பரிய ஆதாரங்களாகத் திகழ்வது நம் வேதங்களும், சங்ககாலத் தமிழ் இலக்கியங்களும், வால்மீகி தந்த இராமாயணமும், வேத வியாசர் தந்த மகாபாரதமும், நாயன்மார்கள் அருளிய திருவாசக தேவாரங்களும், பதினெண் சித்தர்கள் தந்த பாக்களும், பன்னிரு ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்ய பிரபந்தங்களும் இன்னும் பிறவுமாம் என்பது உறுதி.

ஏனெனில், கட்புலனுக்கு எட்டாத தூரத்தில் இருந்து கொண்டு இவ்வுலகை ஆட்டிப் படைக்கும் விண்மீன்களும் கோள்களுங் கொண்ட இப்பிரபஞ்ச இயக்கத்தை நம் மகிரிஷிகள் ஆண்டாண்டு காலமாய் தலைமுறை தலைமுறையாய்க் கணித்து அவற்றின் குணநலன்களை எடை போட்டு சுற்றுப் பாதையினையும் வேகத்தையும் சரிவரக் கணித்து அவற்றை நாள், நாழி, விநாடி விகலை அளவில் கூறுமளவுக்கு வகுத்துக் கொடுத்த வானியல் கலையும், நாம் வசிக்கும் இப்பூவுலகிலுள்ள அனைத்து உயிரினங்களுக்கும் விண்ணிலுள்ள கோள்கள் மற்றும் விண்மீன்களுக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருப்பதை உணர்ந்து அதன் காரணமாக நம் வாழ்க்கைப் பாதையில் அவ்வப்போது அவற்றின் இயக்கத்திற்கொப்ப நேரிடும் நன்மை, தீமை, இன்ப, துன்பம், லாபநஷ்டம் ஆகிய மாற்றங்களை அறிந்துகொள்ள நமக்கு வடித்துக்கொடுத்த சோதிடக் கலையும் மேற்கூறிய அனைத்திலும் இழையோடும் ஒரே காரணத்தால்தான்.



## கால ஊழியில் கற்காலமும் - பொற்காலமும்

அவ்வப்போது அனைத்துக் கோள்களின் இயக்கத்திற்கொப்ப வெள்ளம், புயல், பூகம்பம், வெப்பம், குளிர், எரிமலைக்குமுறல், விண்கற்கள் வீழ்தல், கடல் மட்டம் கூடுதல், குறைதல், பிரளயம் போன்ற இயற்கை உற்பாதங்களும், மக்கள் பெருக்கம், வறுமை, பசி, பஞ்சம், பட்டினி, தீரா நோய், அராஜகம், அசுரர்களின் தோற்றம் அவதார புருஷர்களின் ஜனனம், பயங்கரப் போர் முதலானவைகளும் நிகழ அதனால் உலகில் மனித நாகரிகம் மறைவதும் மீண்டும் நாளாவட்டத்தில் வளர்ந்து மிளிர்வதுமாக உள்ளதால்தான் கற்காலமும் பொற்காலமும் மாறி மாறி வந்தவண்ணமுள்ளன.

இன்றுள்ள சூழ்நிலையில் ஓர் அணு ஆயுதப் போர் உலகில் நடந்து முடிந்து விடுமேயானால் அடுத்து நாம் எதிர்கொள்வது ஒரு கற்காலமே என்பது திண்ணம்.

எனவே நாம் எந்தவொரு காலத்தையும் கற்காலமெனக் கருத்திற் கொண்டு, அதனின்றுதான் மனிதன் இன்றுள்ள வியத்தகு விஞ்ஞானவுலகை எட்டியுள்ளான் எனக் கொள்வது முற்றிலுந் தவறாம்.

நாம் வசிக்கும் இவ்வுலகம் எண்ணற்றக் கோடிக் கணக்கான ஆண்டுகளைச் சந்தித்துள்ளதென்பது உறுதியாம்.

அந்த அளவுக்கு அரிய பல, தடயங்கள் அகில உலகிலும் ஆங்காங்கே நாள்தோறும் கிடைத்தவண்ணமுள்ளன.

இதனின்று கற்காலமும் பொற்காலமும் உலகந் தோன்றிய நாள்முதல் தொன்று தொட்டு நடந்து வந்துகொண்டு தானிருக்கின்றது என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

# இந்திய வரலாற்றில் இராமாயணமும் - மகாபாரதமும்

ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் நம் பாரத பூமியில் உண்மையில் பிறந்து வாழ்ந்து வழி காட்டிச் சென்றுவிட்ட வரலாற்று நாயகர்களே என்பதை அவ்விரு தீர்க்க தரிசிகளுக்கும், முறையே அயோத்தி, மதுரா ஆகிய இடங்களோடல்லாமல் அகில உலகிலும் ஆங்காங்கே ஆலயங்கள் பல அமைத்து, நாள்தோறும் பூஜை புனஸ்காரங்கள் நடக்க நாம் வணங்கி வழிபட்டு வருகிறோம் என்பதினின்று உறுதிப்படுத்த முடிகின்றது.

அன்றாடம் மக்களுக்கும் மாக்களுக்கும் தண்ணீர் தேவையென எண்ணி, நம் முன்னோர்கள் ஊருக்கு ஊர் கேணி, குளம், ஏரி முதலான நீர்நிலைகளைத் தோற்றுவித்தாற் போன்றே, நாகரிகம் மிக்க நம் இந்து கலாச்சாரம், பண்பாடு, ஒழுக்கம் என்றென்றும் அழிந்தொழியாது நிலை பெற்றிருக்க வேண்டுமென்ற நல்ல நோக்கத்தோடு நம் மகரிஷிகளில் இருவர், நமக்கு ஓர் ஒப்பற்ற மாபெரும் வாவியை அமைத்துக் கொடுத்துள்ளார்கள்.

அந்த வாவிதான் "வா" வால்மீகி தந்த இராமாயணமும் "வி" வியாசர் தந்த மகாபாரதமுமாம்.

இவ்விரு காவியங்களும் செவி வழியாய் இன்று ஏட்டளவில் இடம் பெற்று, பலரும் படித்துப் பயனுறுமளவுக்கு இருந்து வருவது, நம் பாரத தேசம் செய்துவிட்ட பெரும் புண்ணியமாம்.

இடையில் தோன்றிய எவ்வளவோ காவியங்கள் நம்மை விட்டு மறைந்து போனாலும் அவ்விரு காவியங்கள் மட்டும் இன்றுவரை, நம்மோடு உயிர்க் காவியங்களாக நீக்கமற நிலைத்தும் விட்டன.

அவ்வப்போது மக்களிடையே தீய எண்ணங்கள் ஏற்பட்டு சமுதாயம் சீர்கேடுறும் போதெல்லாம், மக்களை நல்வழிப்படுத்த நல்லோர்களின் நல்லெண்ண ஆற்றலுக்குட்பட்டு இறைவன் இப்பூவுலகில் மனித உருவில் ஓர் அவதார புருஷராகத் தோன்றி, துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிந்து, மக்களிடையே நல்லொழுக்கத்தைப் பரப்பிவிட்டு மறைந்து போனாலும், அவ்வாறு தோன்றிய அனைவரும் தெய்வீக புருஷர்களாக ஆம், தீர்க்கதரிசிகளாக நாம் என்றென்றும் வழிபடுமளவுக்கு இருந்து வருகிறார்கள்.



அவ்வாறு தோன்றியவர்கள் மகரிஷிகளாகவும், மாமன்னர்களாகவும், மகான்களான தீர்க்க தரிசிகளாகவும் இருந்து வந்துள்ளார்களென்பது உலக வரலாறாம்.

அவர்களில் குறிப்பிடத்தக்க பலருள் ஸ்ரீ முருகனோடு, ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன், பதினெண் சித்தர்கள், அறுபத்தி மூன்று நாயன்மார்கள், பன்னிரு ஆழ்வார்கள், மகாவீரர், புத்தர், ஆதிசங்கரர், இயேசுநாதர், மத்வாச்சாரியார், முகம்மது நபிகள் நாயகம், இராமானுஜர், குருநானக் போன்றவர்கள் அதி முக்கியமானவர்களாவார்கள்.

அதற்கு இன்று ஸ்ரீ முருகனோடு ஸ்ரீராமனையும் ஸ்ரீ கிருஷ்ணனையும் நாம் தெய்வீக புருஷர்களாகக் கொண்டு அங்கிங்கெனாது ஆலயங்கள் பல அமைத்து வழிபட்டு வருவதே சான்றாம்.

இம்மூன்று தீர்க்கதரிசிகளும் வெறும் கதாநாயகர்களோ அல்லது கற்பனை நாயகர்களோ; அல்லவென்றும் அம்மூவரும் உலகில் அவரவர்களுக்குரிய காலகட்டத்தில் மனிதர்களாகத் தோன்றி தாம் ஏற்று வந்த பிறவிக் கடன்களை முடித்துக்கொள்ள துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிந்து, மக்களோடு மக்களாய் வாழ்ந்து, வழிகாட்டிச் சென்றுவிட்ட வரலாற்று நாயகர்களே என்பதை உலகிற்கு உணர்த்தவும், நம் பாரததேசத்துப் புராதன வரலாறு உலகிற்கே முதன்மையான ஒன்றென நிரூபித்துக் காட்டவும், இன்று நமக்குப் பெருந்துணையாக இருப்பனவற்றுள் வேதகால வானியல் தலையாய ஒன்றாம் என்பது திண்ணம்.

இராமாயணம் ஒரு கிரிமினல் வழக்காம், மகாபாரதம் ஒரு சிவில் வழக்காம்.

இவ்விரு வழக்குகளும் நம் வாழ்க்கைப் பாதையில் இடம்பெறக் கூடாதென் றெண்ணியே வால்மீகி முனிவர் இராமாயணத்தையும், வேதவியாசர் மகாபாரதத்தையும், நாம் என்றென்றும் படித்துப் பயனுறுமளவுக்குப் படம் பிடித்தாற் போன்றே அவற்றில் வரும் முக்கிய நிகழ்ச்சிகளுக்கு ஆங்காங்கே சௌரமான, சாந்திரமான, ஆண்டு மாதம், பக்ஷம், ருது, திதி, நட்சத்திரம், உத்திராயணம், தக்ஷிணாயணம், அயனாம்சம் போன்ற தகுந்த ஆதாரங்களோடு

கோள்களின் நிலை, சப்தரிஷிகளின் நிலை மற்றும் சூரிய சந்திர கிரகணங்கள் அனைத்தையும் அள்ளி அள்ளிக் கொடுத்துள்ளார்கள்.

இவ்விரு காவியங்களிலும் நாம் கற்றுத் தேர்ந்து தெளிவுபெற தாய்ப்பாசம், தந்தை சொல் தட்டாமை, சகோதரர் வாஞ்சை, மறந்தும் விளையாட்டாகப் பெரியோர்களைத் துன்புறுத்தாமை, நல்நட்பு, பெரியோர்களை மதித்தல், பிறர்மனை நயவாமை, துன்புறுவோர் துயர்துடைத்தல், அன்பு, அறம், அடக்கம் இன்னபிற உயரிய கருத்துக்களை நாம் காணமுடிகின்றது.

இதனின்று நம் பாரத பூமியில் நடந்து முடிந்த இரு வரலாற்றுக் காவியங்களான இராமாயணமும், மகாபாரதமும் நம் இந்திய தேசத்துப் பண்பாட்டை, கலாச்சாரத்தை எவ்வளவு தூரம் பேணிப் பாதுகாத்து வந்துள்ளன என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகின்றதல்லவா ?

## காலத்திற்கொவ்வா கற்பனை வரலாறே

நம் பாரத தேச வரலாற்றை கி.பி. 18,19 ஆம் நூற்றாண்டுகளில் நம் இந்திய தேசத்தில் புகுந்த மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள் தவறாக மதிப்பிட்டு விட்டார்கள். அதற்கு அப்போது மேல்நாட்டு வானியல் வல்லுநர்களின் தவறான மதிப்பீடும் துணை நின்றது.

அத்துடனவர்கள் இந்திய தேசத்தவர் சொந்த புத்தி அற்றவரென்றும் வானியலைக் கிரீஸ் தேசத்தினின்று கேட்டு வந்தவர்களென்றும், கிண்டல் செய்ததோடு, வேண்டுமென்றோ அல்லது தெரிந்தோ தெரியாமலோ, நாகரிகமற்ற இந்தியர்களுக்கு நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் தாங்களேயெனக் கூறி வரலாற்றை விரிவாக எழுதிவிட்டார்கள்.

மற்றும் மத்திய ஆசியாவில் மாடு, ஆடு மேய்த்து வந்த ஆரியர்கள் கி.மு. 1500 வாக்கில் ஹைபர் போலன் கணவாய்களின் மூலம் இமயமலையைக் கடந்து இந்திய தேசத்தில் புகுந்து, சிந்து கங்கைச் சமவெளியில் குடியேறி, அங்கே வசித்து வந்த திராவிடர்களைத் தெற்கே அடித்துத் துரத்தியதாகவும் கற்பனையயாக வரலாற்றை எழுதிவிட்டார்கள்.



இவையாவும் எந்தவிதமான ஆதாரங்களற்ற கற்பனையே தவிர உண்மை அதுவல்ல என்பது உறுதியாம். அத்துடன் அப்போது ஆரியர் திராவிடர் என்ற இன வேறுபாடு இருந்ததற்கு எந்தவொரு ஆதாரமும் இருந்ததாகத் தெரியவில்லை.

இன்று நாம் கூறும் ஆரியர், திராவிடர் அனைவருமே நம் பாரதத்தாய் பெற்றெடுத்த தவப் புதல்வர்ளே. ஆம், நம் புராதன இந்திய தேசத்தின் பூர்வீகக் குடிகளே.

அவர்கள் அனைவரும் முதன்முதல் முக்குணத்தால் வேறுபட்டு பின் தொழில் ரீதியாய்ப் பிரிந்து, அதன்பின் தோன்றியதே இன்றுள்ள சாதி சமய வேறுபாடுகள் யாவுமாம் என்பது உறுதி.

ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திற்கு அப்போது நாம் அடிமைப்பட்டு வாழ்ந்ததால் அவர்கள் எழுதிய இந்திய தேச வரலாற்றை மறுத்துக் கூறத் தவறியுள்ளோம்.

அனைத்தும் கற்ற ஆன்றோர் பலர் "நமக்கு ஏனிந்த வம்பு" என ஒதுங்கியும் இருந்திருக்கலாம். அத்துடன் அப்போது ஆதாரத்தோடு மறுப்பதற்கியலாத அளவுக்கு கி.பி. 400க்குப் பின் சிதைவுற்ற புராணங்களால் வேதகால வானியல் நம்மைவிட்டு மறைந்து திசைமாறிப் போனமையும் காரணமாம்.

அந்தப் புராணங்கள்தான் இன்றும் நம்மிடையே நிலவுவதாகவுள்ளன.

அயோத்தியை ஆண்ட தசரத மன்னனுக்குரிய மூன்று மனைவியரை மூவாயிரம் என்றும், அவர் 60 ஆண்டுகள் வரை புத்திரப் பேறின்றி இருந்ததை, அவர் அறுபதாயிரம் ஆண்டுகள் புத்திரப் பேறின்றி இருந்துள்ளதாகவும், ஸ்ரீராமன் இராவண வதத்திற்குப்பின் சுமார் 11 ஆண்டுகள் வரை ஆட்சி புரிந்ததை அவர் பதினோறாயிரம் ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாகவும் புராணங்களில் குறிப்பிட்டுவிட்டால், இதை யார்தான் நம்புவார்கள் ?

இன்று நடைமுறையில் இருந்துவரும் சாதாரண ஆண்டை, தேவமானமென்று, மன்வந்தரம், கல்பம், பிரளயம், மகாபிரளயம் ஆகியவற்றைக் கோடிக்கணக்கான ஆண்டுகளாகப் பெருக்கிக் கொள்வதால்தான், மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள் நம் புராணங்களின் மீது நம்பிக்கையற்றவர்களாக கி.மு. 509ல் தோன்றிய ஆதிசங்கரரை கி.பி. 788ல் தோன்றியதாக நிர்ணயித்து வரலாற்றில் இடம்பெறச் செய்துவிட்டார்கள்.

இவ்வாறு பெருக்கிக் கணக்கிடுவதை, மறைந்த நம் காஞ்சி மாமுனிவர் தனது தெய்வத்தின் குரல் 5–ஆம் பாகம் 796 ஆம் பக்கத்தில் " நாம் ஒரு புளுகு மூட்டையைக் கட்டி வைத்துள்ளோம்" என்று தனது ஆதங்கத்தை அழகாகத் தெளிவுபடுத்தியுள்ளார்.

எவ்வளவோ உண்மைகள் பொதிந்துள்ள நம் புராண இதிகாசங்களை கி.பி. 400க்குப் பின் புதுப்பித்து எழுத முற்பட்டபோது அவற்றில் ஒன்றை ஆயிரமாகவும் சாதாரண ஆண்டைத் தேவமான ஆண்டாகவும் பக்திப் பரவசத்தால் நம் பௌராணீகர்கள், அலங்காரமாக மிகைப்படுத்தி குறிப்பிட்டுவிட்ட ஒரு சிறு தவறுக்காக, மேல்நாட்டு நம் நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள், அனைத்தும் கற்பனையே என்ற முடிவுக்கு வந்தவர்களானார்கள் என்பதுதான் உண்மை, உறுதியும் கூட.

ஆனால் ஸ்ரீ ராமனின் வனவாச காலத்தை மட்டும் ஏன் ? பதினான்காயிரம் ஆண்டுகள் எனக் கூறாது அதை மட்டும் வெறும் 14 ஆண்டுகள்தானென்று கூறியுள்ளதை இதுவரை எவரும் விமர்சித்து சந்தேகம் எழுப்பியதாகத் தெரியவில்லை.

இந்தியாவில் குடியேறிய ஆரியர்கள் கி.மு. 500க்குப் பின்னர்தான் நாகரிகம் பெற்று ஒரு நல்ல நிலைமைக்கு வந்து அப்போது தோன்றியதே வேதபுராண இதிகாசங்கள் யாவும் எனக் கருதி, மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்களால் எழுதப்பட்டுவிட்ட கற்பனையான இந்திய தேச வரலாற்றை உண்மையென நம்பி, நம் பாரத தேசத்துப் புராதன வரலாறு அதற்குப் பிற்பட்டதுதான் என்று உறுதியும் செய்து கொண்டுவிட்டோம்.

அதே காலத்தில்தான் தென் தமிழகத்தில் முதல் தமிழ்ச் சங்கமும் தோன்றியிருக்க முடியுமென்று உறுதி கொண்டுள்ளவர்களானோம்.

அதன் காரணமாக உண்மையில் கி.மு. 16500லிருந்து தொடர்ந்து எழுதப்பட வேண்டிய நம் பாரத தேசத்து, குறிப்பாகத் தமிழகத்து புராதன வரலாற்றை கி.மு. மூன்றாம் நூற்றாண்டுதான் முதல் தமிழ்ச் சங்ககாலம் எனக் கருதி அதினின்று எழுத்தமைதியை வைத்து கி.மு. 500க்கு முன்னுள்ள சுமார் பதினாறாயிரம் ஆண்டுகள் கொண்ட உன்னத வரலாற்றை கி.பி. ஆண்டுகளில் சுமார் 1000 ஆண்டுகளுக்குள் காணமுற்பட்டது காலத்திற்கொவ்வாத கற்பனை வரலாறே என்பது திண்ணம்.



இதினின்று கி.மு. 16500க்குப்பின் ஸ்ரீ முருகன் வாழ்ந்த கலியுக காலத்தில் தென் தமிழகத்தில் தென்மதுரையைத் தலைநகராக் கொண்டு பாண்டியர்கள் அரசோச்சியபோது அகஸ்த்தியர் தலைமையில் முதல் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டு, அப்போது முதல் நம் தமிழன்னையை அரியாசனத்தமர்த்தி அழகு பார்க்க வேண்டிய நாம், பதினாறாயிரம் ஆண்டுகளுக்குப் பின் கி.மு. மூன்றாம் நூற்றாண்டினின்றுதான் முதல் தமிழ்ச் சங்க காலம் எனக்கொண்டு கற்பனையாக கி.மு. 32லிருந்து வள்ளுவர் ஆண்டையும் கணக்கிட்டு நம் தமிழன்னையை அனைத்து வரலாற்றிற்கும் கீழே கொண்டுவந்து தலைகுனியச் செய்துவிட்ட தவறு நேர்ந்துள்ளதென்பதை வானியல் தரும் வரலாற்றுக் குறிப்புகளின் வாயிலாக உறுதிப்படுத்த முடிகின்றது.

எனவே நமக்கு எந்தவொரு சம்பந்தமுமில்லாத கால வரலாற்றை இன்று நாம் கொண்டுள்ளோமென்பது தெளிவாம்.

## இன்றுள்ள அஸ்த்திரங்கள் அன்றும் உள்ளன

வால்மீகி தந்த இராமாயண காவியத்தில் ஸ்ரீஸ்கந்தன் (முருகன்) புகழ் பேசப்படுகிறது. அதில் ஜானகியின் சுயவரம் நடந்தபோது பாண்டிய மன்னனுக்கு அழைப்பு விட்டதாகக் கூறப்படுகிறது.

இதினின்று ஸ்ரீ முருகன் தோன்றிய கலியுகத்திலேயே முதல் தமிழ்ச்சங்கம் நிறுவப்பட, அதன்பின் வைவஸ்வதமனுவால் கி.மு. 15261ல் தோற்றுவிக்கப்பட்ட 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகம் முடிந்து, பின் தோன்றிய திரேதாயுகத்தில் ஸ்ரீராமன் கி.மு. 10205ல் தோன்றியதாக வானியல் மூலம் உறுதிப்படுத்த முடிவதால் இராமாயண காலத்திற்கு சுமார் 5500 ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் முதல் தமிழ்ச்சங்கம் தோன்றிவிட்டதென்பது புலனாகிறது.

வால்மீகி தந்த இராமாயண காவியத்தை மூலமாகக் கொண்டு கம்ப நாட்டாழ்வாரால் தொகுக்கப்பட்ட கம்பராமாயணத்தில் சூர்ப்பனகை வாயிலாக;

*காற்றினையும் புனலினையும் கனலினையும் கடுங்காலக்*
*கூற்றினையும் விண்ணினையும் கோளினையும் பணிகொண்டற்கு*
*ஆற்றினைநீ ஈண்டிருவர் மானிடவர்க் காற்றாது*
*மாற்றினையோ உன்வலத்தைச் சிவன்றடக்கை வாள்கொண்டாய்*

என்று

ஆற்றல் பெற்ற இராவணனைப் பற்றி அழகாகக் கூறப்பட்டுள்ளது.

மற்றுமொருவிடத்தில் மண்டோதரி வாயிலாக ;

*அம்புலி அம்மா வாவென் றழைத்தலும் அவிர்வெண் டிங்கள்*
*இம்பர்வந் தானை அஞ்சல் எனஇரு கரத்தின் ஏந்தி*
*வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங்கும் வண்ணம்*
*எம்பெருங் களிறே காண வேசற்றே எழுந்தி ராயோ ;*

என்றும்

இன்னுமோரிடத்தில் இந்திரசித்தின் வாயிலாக ;

*சூழ்வினை மாய மெல்லாம் உம்பியே துடைக்கச் சுற்றி*
*வேள்வியை சிதைய நூறி வெகுளியால் எழுந்து வீங்கி*
*ஆள்வினை ஆற்றல் தன்னால் அமர்த்தொழில் தொடங்கியார்க்கும்*
*தாழ்விலா படைகண் மூன்றும் தொடுத்தன்ன் தடுத்து விட்டான்.*

என்றும்

*நிலஞ்செய்து விசும்புசெய்து நெடியமால் படைநின் றானை*
*வலஞ்செய்து போயிற் றென்றால் மற்றினி வலிய துண்டோ*
*குலஞ்செய்த பாவத் தாலே கொடும்பகை தேடிக் கொண்டாய்*
*சலஞ்செயின் உலகம் மூன்றும் இலக்குவன் முடிப்பன் றானே.*

என்றும்

*முட்டிய செருவின் முன்ன முதலவன் படையை என்மேல்*
*விட்டிலன் உலகை அஞ்சி ஆதலான் வென்று மீண்டேன்*
*கிட்டிய போதுங் காத்தான் இன்னமுங் கிளர வல்லான்*
*சுட்டிய வலியி னாலே கோறலைத் துணிந்து நின்றான் ;*

என்றும்

இலக்குவனின் ஆற்றல் எடுத்தோதப்பட்டுள்ளது.

இதினின்று மேற்கூறிய அனைத்தும் இன்றுள்ள மனிதனின் விஞ்ஞான ஆற்றலுக்குச் சாத்தியமே என நிரூபணமாகியுள்ளன.



இன்று நாம் காணும் விஞ்ஞானப் புதுமைகளும் அதிவேக அஸ்த்திரங்களும், அவ்வாறு விடப்படும் அஸ்த்திரங்களைத் தடுத்திடும் உபாயமும், வால்மீகி கூறும் இராமாயண காலத்திலும் வியாசர் கூறும் மகாபாரதக் காலத்திலும் இருந்தனவே என்பதை அவ்விரு வரலாற்றுக் காவியங்களின் வாயிலாகத் தெள்ளிதின் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

நம் புராணங்களில் நாம் காணும் அனைத்தும் உண்மையே ; ஆனால் அந்த உண்மை அலங்காரக் கூற்றால் மறைந்துள்ளது. வால்மீகி கூறும் பிரும்மாஸ்திரம், அக்னியாஸ்திரம், வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம், நாகபாணம் அனைத்துமே இன்று தலை தூக்க ஆரம்பித்து விட்டன. சோதனைகள் நடத்தப்பட்டு அதில் வெற்றியும் காணமுடிகின்றது.

அத்துடன், அப்போதே சூரியனை நோக்கிச் சென்ற வல்லவர்களின் வரலாறுமுண்டு. இன்றும் அனைத்துக் கோள்களோடல்லாமல் சூரியனை நோக்கியும் விண்கலமொன்றை அனுப்பத் தயாராகவுள்ளோம். வெகுவிரைவில் அனுப்பத்தான் போகிறோம்.

இதினின்று இன்று நாம் காணும் அதிவேக அஸ்த்திரங்கள் அனைத்தும், அன்றே நம் பாரத பூமியில் கையாளப்பட்ட ஒன்றே என்பது தெளிவாம்.

## நடந்திராதென்பன நடந்தது உண்மை

இன்று சந்திரனில் மனிதனை இறக்கியதோடு மண்ணையும் கொண்டு வந்துவிட்டார்கள். அந்தரத்தில் நடக்கிறார்கள். மாதக் கணக்கில் செயற்கைக் கோளொன்றைத் தோற்றுவித்து அதில் மக்களைக் குடிபுகச் செய்து, வாழ்நாள் முழுவதும் தனி உலகமாக காலங்கழிக்க வைக்கும் முயற்சியும் நடந்து கொண்டு தானிருக்கின்றது.

அடுத்து செவ்வாய்க் கோளில் குடிபுக முயற்சிக்கிறார்கள். விரைவில் குடியேறியும் விடுவார்கள். இத்தகைய காலகட்டத்தில் இன்று நாம் இருந்துவருகிறோம்.

தனது தாய் உத்தரை வயிற்றில் சிசுவாக இருந்தபோது உத்தரையிடம் அருச்சுனன் கூறிய போர்த்திறனை செவிமடுத்த அபிமன்யு, குருக்ஷேத்திரத்தில் மகாபாரதப் போரின் போது பத்ம

வியூகம் அமைத்து உள்நுழைந்தானாம்; குருக்ஷேத்திரத்தில் நடந்த மகாபாரதப் போரின் நிகழ்ச்சிகளை சுமார் 150 மைல்களுக்கு இப்பால் இருந்த அஸ்த்தினாபுரத்தில் அரண்மனையில் வீற்றிருந்த திருதராஷ்டிரனுக்கு அருகில் இருந்தவாறே சஞ்சயன் விளக்கிக் கூறினானாம்; மற்றும் தான் ஐந்து வயது குழந்தையாக இருந்த போதே திருஞானசம்பந்தர் சீர்காழியில் தேவாரம் பாடத் தொடங்கினாராம் எனறெல்லாம் எள்ளி நகையாடி வால்மீகியும் வியாசரும் கின்ளி வைத்த பொய்யை கம்பரும் வில்லிபுத்தூராரும் அள்ளி வைத்து விட்டார்களென்று விமர்சித்து வந்த அனைவருமே இன்றுள்ள விஞ்ஞான உலகில் இவையாவும் சாத்தியமே என உணரத் தொடங்கிவிட்டார்கள்.

இதினின்று நம் வேத புராண இதிகாசங்களில் கூறப்பட்டுள்ள அனைத்தும் நடந்திராதென்று கட்டியம் கூறிவந்த அனைவருக்கும், அவையாவும் நடந்தவையே என கண்ணுறும் அளவுக்குக் காலம் இன்று கனிந்துள்ளதென்பதை நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

## அன்றுள்ள மெய்ஞ்ஞானமே இன்றுள்ள விஞ்ஞானம்

அன்று ஒரு காசுகூடச் செலவின்றி, ஐம்புலனடக்கத்தால் பெற்ற, தபோ வலிமையின் ஆற்றலை, ஒரு சிலர் சுயநலம் கருதாது உலக க்ஷேமத்தை உத்தேசித்து மக்கள் நீதி நெறி தவறாது நேர்மையுடன் வாழ வழி காணுமளவுக்குப் பயன்படுத்தி மகரிஷிகளானார்கள்.

ஆனால், அதே சமயத்தில் அவ்வாற்றலை பூர்வ ஜென்ம வாசனையால் ஏற்பட்ட குணபேதத்தால் அராஜகத்திற்கு வித்திட்டு அசுரர்களுமானார்கள்.

அந்த வகையில் ஆரிய வம்சத்தில் தோன்றிய இராவணன், தான் பெற்ற அளப்பரும் ஆற்றலை குணபேதத்தால் அராஜகத்திற்கு வித்திட்டுக் கொடிய அரக்கனாகியுள்ளான்.

அஃதே போன்று அநேகம்பேர் ஐம்புலனடக்கத்தால் பெற்ற ஆற்றலைத் தவறான வழியில் பயன்படுத்தி அசுரர்களானதால் மக்களும், மாக்களும் முனிபுங்கவர்களும், ஏன் ? கோள்களுங்கூட அடைந்த துன்பங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. இவை அனைத்தையும் நம் புராணங்கள் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது.

இன்று கோடி கோடியாய்ப் பணத்தைச் செலவிட்டு அதன்மூலம் கிட்க்கும் விஞ்ஞான ஆற்றலை ஆக்கபூர்வமான



காரியங்களுக்குப் பயன்படுத்தாமல், அழிவுப்பாதையினை நோக்கி நடைபோடுவதைப் பார்த்தால், வெகுவிரைவில் உலகம் மனிதப் பூண்டே அற்று நிர்மூலமாகும் அபாய கட்டத்தை அடைந்து விடுமோவென்ற அச்சமும் மேலோங்கி நிற்கின்றது.

அந்த அளவிற்கு அணு ஆயுதக் குவிப்பிற்கும், போர்த் தளவாடங்களுக்கும் அகில உலகும் விஞ்ஞான ஆற்றலைப் பயன்படுத்துவதாகவுள்ளன.

அத்துடன் மக்கள் பெருக்கம் ஏற்பட்டு அராஜகம் மலிந்து சுற்றுச் சூழலும் மாசுபட்டு, புதுப்புது வியாதிகளும் புகுந்த வண்ணமுள்ளன. அந்த அளவுக்கு அழிவை நோக்கி உலகம் இன்று நடைபோடுவதாகவுள்ளது. அணுகுண்டை வைத்து கோள்களைத் தகர்த்துக் கடலைத் தூர்த்துவிடுமளவுக்கு இன்று விஞ்ஞானம் வளர்ந்தோங்கி உச்சநிலையை அடைந்துள்ளது.

இந்த நிலையிலாவது வால்மீகி தந்த இராமாயணமும், வியாசர் தந்த மகாபாரதமும் நம் பாரத பூமியில் உண்மையில் நடந்து முடிந்த வரலாற்றுக் காவியங்கள்தான் என்று நம்புவோமாக.

## விஞ்ஞான வளர்ச்சியில் விபரீத புத்தி

இன்றுள்ள செயற்கரிய விஞ்ஞான வளர்ச்சி, இயற்கை அன்னையைச் சீர்குலைப்பதாகவேயுள்ளது. இன்றுள்ள மக்கள் பெருக்கமும் ஆடம்பர வாழ்வும், உயிரனைய உணவுப் பொருள்களுள் ஒன்றான தண்ணீரை குடிநீருக்காகவும் விவசாயப் பெருக்கத்திற்காவும் தொழிற் சாலைகளுக்காகவும் அன்றாடம் மின்சக்தி மற்றும் எண்ணெய் உதவி கொண்டு படுபாதாளம் வரை உரிஞ்சி எடுக்க வழி வகுக்கிறது.

நீண்ட நெடுங்காலமாகக் கேணி, குளம், ஏரி முதலான நீர் நிலைகளைத் தோற்றுவித்து, அவற்றினின்று தண்ணீரை குடிநீருக்காகவும், விவசாயத்திற்காகவும் உபயோகப்படுத்தி வந்ததை விடுத்து, ஆழ்குழாய்க் கிணறுகளைப் பயன்படுத்தி அன்றாடம் அபரிமிதமான தண்ணீரை உறிஞ்சி எடுப்பது, வட்டியை மட்டும்

செலவிடுவதற்குப் பதிலாக நிலத்தடி நீராம் அசலையே எடுத்து செலவிடுவதற்கு ஒப்பதாம்.

இன்றுள்ள மக்கள் பெருக்கத்தின் காரணமாகத் தேவையைப் பூர்த்தி செய்ய, இந்த நிலை நீடிக்கும்போது வெகுவிரைவில் தண்ணீர் பற்றாக்குறைதான் மக்களை வாட்டி வதைக்கப் போவதாகவுள்ளது. காலரா நோய் கண்டவர்களுக்கு ஊசி மூலம் நீரை உடலுக்குள் செலுத்தி உயிர் பிழைக்க வைப்பது போன்று, காலரா நோய் காணவுள்ள பூமி தேவிக்கு மழை வெள்ளம் போன்ற நீர் பெருக்குக் காலங்களில் குழாய் மூலம் நீரை பூமிக்குள் செலுத்தித்தான் ஆகவேண்டும் என்ற நிலை தோன்றியுள்ளது.

உணவுக்கும் நீருக்கும் பற்றாக்குறை நேர்வதெல்லாம் மக்களழிவிற்கு ஆரம்பகட்டமே. இந்த நிலை அறுநூறு கோடி மக்களைக் கொண்ட உலகை இன்று அச்சுறுத்துவதாகவுள்ளது. அத்துடன் அன்றாடம் நடக்கும் வன்முறைச் சம்பவங்களை உற்று நோக்கும்போது, ஏதோ ஓர் பேரழிவை நோக்கி உலகம் நடைபோடுவதாகத்தான் தோற்றமளிப்ப தாகவுள்ளது.

இன்றுள்ள விஞ்ஞான வளர்ச்சியில் விபரீத புத்தி மேலோங்குமானால் அது உலகை அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்வதற்கு அடிகோலுவதாம் என்பது உண்மை.

ஏனெனில் இன்று உலக அரங்கில்,

| | | | |
|---|---|---|---|
| *அராஜகப்* | *போக்கும்* | *அணுஆயுதக்* | *குவிப்பும்* |
| *நல்லொழுக்கச்* | *சீர்குலைவும்* | *நாடுபிடிக்கும்* | *ஆசையும்* |
| *பதவி* | *மோகமும்* | *பகட்டான* | *வாழ்வும்* |
| *பட்டப்* | *பகலில்* | *பலர்முன்* | *நிலையில்* |
| *களவுங்* | *கொலையுங்* | *கற்பழிப்* | *பதுவும்* |
| *லஞ்சப்* | *பெருக்கமும்* | *லௌகீகச்* | *சுருக்கமும்* |
| *சொந்த* | *நலமும்* | *சுரண்டல்* | *புத்தியும்* |
| *அடக்க* | *மின்மையும்* | *அடாவடித்* | *தனமும்* |
| *அன்பு* | *குறைதலும்* | *ஆன்மீகம்* | *மறைதலும்* |
| *சினிமா* | *மோகமும்* | *சிற்றின்பத்* | *தாபமும்* |
| *சாதிப்* | *பூசலும்* | *சமயச்* | *சச்சரவும்* |
| *நேர்மை* | *குறைதலும்* | *நீதி* | *மறைதலும்* |
| *குடியால்* | *வெறியும்* | *சூதர்க்கப்* | *புத்தியும்* |
| *வணங்கள்* | *அழிவதும்* | *வளங்கள்* | *குறைவதும்* |
| *விளைநில* | *மெல்லாம்* | *வீடா* | *வதுவும்* |
| *மக்கள்* | *பெருக்கமும்* | *மாளாத்* | *துக்கமும்.* |



ஆகிய இன்னோரன்ன தகாதன அனைத்தும் தலைதூக்கி நிற்பதைப் பார்த்தால், இப்போதே ஓர் அவதார புருஷர் தோன்றிவிட்டது போலவும் அவர் இன்னார் என்பதை வெகுவிரைவில் உலகிற்கு அறிமுகப்படுத்தி விட்டு துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிந்து ஒரு புதிய சகாவைத் தோற்றுவித்து விடுவதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன.

அந்த அளவுக்கு அனைத்துக் கோள்களும், குறிப்பாக குரு, சனி, யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ ஆகிய ஐந்தும் நெருங்கிப் பிரியவுள்ள பாங்கை நாம் காணமுடிகின்றது.

எல்லாம் வல்ல இறைவன்
நல்லருள் புரிவா ராகுக.

## வேதம் கூறும் மூலாதாரம்

நம் மகரிஷிகள் தந்த வேத புராணங்களின் வாயிலாக வரலாறு தரும் முதுல் மனித குலத் தோன்றலான வைவஸ்வத மனு சப்தரிஷி சகாப்தத்தை தமிழ் கும்ப (இ சா) மாசி முதல் நாள், பிருகுவாரம் (வெள்ளிக்கிழமை) மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தில், சரத்ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கியுள்ளார் என்பதைக் காணமுடிகின்றது.

இதினின்று நம் பாரத தேசத்தின் காலக் கணிப்பின் தொடக்கம் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரத்தின் மையமே; ஆம் 300 டிகிரியே என்பது தெளிவாம்.

அதன் காரணமாக அந்த சப்தரிஷி சகாப்தத்தின் தொடக்கம் சௌரமான ரீதியில் தமிழ் கும்பமாசி முதல் நாளாகவும், சாந்திரமான ரீதியில் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா நட்சத்திரமுங்கூடிய தினமாகவு முள்ளதை நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

அத்துடன் வைவஸ்வதமனுவால் தோற்றுவிக்கப்பட்ட சப்தரிஷி சகாப்தத் தொடக்கத்தின் போது, சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் 76ஆம் ஆண்டில் இருந்துள்ளதாக விஷ்ணுபுராணம் கூறுகிறது.

இநத மேலேகண்ட குறிப்புகள்தான் எனது ஆய்வுக்குக் கிடைத்த மூலதாரமாகவுள்ளதோடு, நம் பாரத தேச புராதன வரலாற்றைச் சுமார் கி.மு. 16500லிருந்து தொகுத்தெழுதவும், அந்த சப்தரிஷி சகாப்தத் தொடக்கம் கி.மு. 13–10–15261 வெள்ளிக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு கும்பமாசி முதல்நாள் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினமாம் என்பதையும், அத்தேதி பிர்மாவின் இராப்பொழுதான 28வது மகாயுகத்தின் முதல்யுகமான கிருதயுகத்தின் தொடக்கமே என்பதையும் உறுதி செய்ய ஒரு தொலைநோக்கிக் கண்ணாடியாகவும் அமைந்துள்ளது.

## மகரிஷிகள் கண்ட மகாயுக மகிமை

நம் மகரிஷிகள் வானியல் அளவுகளை ஏனோதானோ வென்று நிர்ணயித்துள்ளதாக நினைப்பதற்கில்லை. அவை யாவும் அர்த்த புஷ்டியுள்ள அளவுகளாம் என்பதை எனது இடையறா எட்டாண்டுகால ஆய்வின் மூலம் உறுதியெனக் கொள்ள முடிந்தது.

அத்தகைய அளவுகளில் மகாயுகம் என்ற மகத்தான அளவு வானியலுக்குக் கிடைத்த வரப்பிரசாதமே என்பது உறுதியாம்.

நம் புராணங்களில் நான்கு யுகங்கள் கொண்டது ஒரு மகாயுகம் என்றும், அதற்குப் பன்னீராயிரம் ஆண்டுகளோடு யுக சந்தியும் உண்டாம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அந்த மகாயுகத்திற்குரிய கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கும் 4 : 3 : 2 : 1 என்ற ரீதியில் பிரிக்கப்பட்டுள்ளதாகவும் அறியமுடிந்தது.

ஸ்ரீகிருஷ்ணன் பகவத் கீதையில் ஒவ்வொரு மகாயுகத்திலும் அந்தந்த யுகங்களில் மக்கள் பெருக்கம் ஏற்பட்டு அராஜகம்



தலைவிரித்தாடும் போதெல்லாம், தான் அவதரித்து துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிவதைப் போன்றே, அடுத்தடுத்து வரும் மகாயுகங்களிலும் அந்தந்த யுகங்களில் வன்முறை தலைவிரித்தாடும் போதும் அஃதே போன்று அவதரிப்பதாகத் தெளிவுபடக் கூறியுள்ளார்.

இக் கூற்றில் ஏதோ ஓர் உண்மை பொதிந்திருக்க வேண்டுமென்று, இதுவரை எவரும் புரிந்து செயல்பட்டதாகத் தெரியவில்லை.

ஆழ்ந்து சிந்திக்கும் போது, அந்தப் பெருமை எனக்குக் கிட்ட வேண்டுமென்று விட்டுவைத்தார்களோ என்னவோ ! என்று எண்ணத் தோன்றுகின்றது.

அனைத்துக் கோள்களின் இயக்கம் ஒரு மகாயுகத்தில் உள்ளவாறே அடுத்தடுத்து வரும் மகாயுகங்களிலும் இருக்கத்தான் வேண்டுமென்ற ஓர் உணர்வு என் மனத்தின்கண் பொங்கி எழ, அதை ஆதாரமாகக்கொண்டு ஆராய்ந்த போதுதான் மகரிஷிகள் தந்த மகாயுகத்தின் பரம ரகசியம் ஸ்ரீ கிருஷ்ணனின் கூற்றினின்று புலனாயிற்று.

எனது ஆய்வில் பன்னிரண்டாயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை அனைத்துக் கோள்களும் ஒன்றுபடுவதாகத் தெரியவில்லையென்பதால், அதற்குமேல் படிப்படியாக உயர்த்திக்கொண்டே கணக்கிட்டபோதுதான் அனைத்துக் கோள்களும் 12160 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒன்றுபடுவதை உறுதி செய்ய முடிந்தது.

இதில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ, இன்னுஞ் சொல்லப்போனால் இனி வருங்காலத்தில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பெறும் கோள்களுங்கூட இந்த 12160 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒன்றுபட்டுத்தான் ஆகவேண்டுமென்ற உண்மையை உறுதி செய்துகொள்ளவும் முடிந்தது.

எனவே இந்த பன்னிரண்டாயிரத்து நூற்றி அறுபது ஆண்டுகளில் 12000 ஆண்டுகளை நான்கு யுகங்களுக்குரிய ஆண்டுகளாகவும், எஞ்சிய 160 ஆண்டுகளை நான்கு யுகங்களுக்குமுரிய யுகசந்தி ஆண்டுகளாகவும் நம் மகரிஷிகள் கணித்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதை உறுதிசெய்ய முடிந்தது.

அதைக் கீழ்க்கண்டவாறுதான் பிரித்துக் கொண்டுள்ள உண்மையை, வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டு தீர்மானிக்க முடிந்தது.

## மகாயுகமும் - நான்கு யுகங்களும்

| தொடர் எண். | யுகங்களின் பெயர்கள் | யுகத்தின் ஆண்டுகள் | யுகசந்தி ஆண்டுகள் | கூடுதல் ஆண்டுகள் | 19ஆண்டு சைக்கிள் |
|---|---|---|---|---|---|
| 1. | கிருதயுகம் | 4800 | 64 | 4864 | 256 |
| 2. | திரேதாயுகம் | 3600 | 48 | 3648 | 192 |
| 3. | துவாபரயுகம் | 2400 | 32 | 2432 | 128 |
| 4. | கலியுகம் | 1200 | 16 | 1216 | 64 |
| | ஆக | 12000 | 160 | 12160 | 640 |

நம்நாட்டு, மேல்நாட்டு வானியல் வல்லுநர்கள் அனைவருமே இன்றுவரை ஒரு சௌரமான ஆண்டிற்குரிய உண்மையான அளவை நிர்ணயித்துக் கொள்ளவில்லை.

ஒவ்வொருவரும் சற்று கூடுதலாகவே, வேறுபட்ட அளவுகளை நிர்ணயித்துக் கொண்டுள்ளார்கள்.

இவர்களின் அளவு ஒரு மகா யுகத்தில் ஒரு நாள் முதல் 30 நாட்கள் வரை கூடுதலாகவே உள்ளது.

சப்தரிஷி ஆண்டின் தொடக்கம் ஒரு வெள்ளிக்கிழமை என்பதையும், அஃதே போன்று கலியுகத்தின் தொடக்கமும் ஒரு வெள்ளிக்கிழமை தான் என்பதையும் நம் புராணங்களின் வாயிலாக அறியமுடிகின்றது.

அதாவது 28வது மகாயுகத்தின் முதல்யுகமான கிருதயுகத்தின் தொடக்கமும், அதன் கடைசி யுகமான கலியுகத்தின் தொடக்கமும் வெள்ளிக்கிழமையே என்பதாம்.

இதை ஆதாரமாகக் கொண்டு ஆய்ந்தபோது ஒரு ஆண்டின் உண்மையான அளவு 365 நாட்கள் 6 மணி 9 நிமிடங்கள் அல்லது 365 நாட்கள் 15 நாழிகை 22 விநாடி 30 விகலைகள் தான் என்பது உறுதியாயிற்று.



அதன்படி ஒரு ஆண்டுக்கு 365.25625 நாட்கள் என்ற ரீதியில் ஒரு மகாயுகமான 12160 ஆண்டுகள் 4441516 நாட்களை இம்மியும் மீறுவதாகத் தெரியவில்லை.

அதன்பின் அனைத்துக் கோள்களின் இயக்கத்தைக் கொண்டு ஆய்ந்தபோது எனது கணிப்பில் 12160 ஆண்டுகளுக்கு ஒரு முறை அனைத்துக் கோள்களும் தமிழ் மகர தை 14ஆம் நாள் ஓர் பௌஷ அமாவாசை தினத்தில் 300 டிகிரிக்கு இருமருங்கிலும் 120 டிகிரிகளுக்குள் இடம்பெற்று, பின் பிரிந்து, மீண்டும் 12160 ஆண்டுகளுக்குப்பின் அதே தமிழ் மகர தை 14ஆம் நாள் ஒரு பௌஷ அமாவாசை தினத்தில் 300 டிகிரிக்கு இரு மருங்கிலும் 120 டிகிரிகளுக்குள் இடம் பெற்று விடுவதை உறுதி செய்ய முடிந்தது.

இக்காலத்தை நம் மகரிஷிகள் கோள்கள் ரீதியாக ஒரு மகாயுகமெனக் கொண்டாலும், அவ்வாறு கூடிய மறுநாளினின்று 50 சாந்திரமான மாதங்களுக்குப் பின்னர்தான், அதே மகாயுகத்தை வேதாங்க சோதிஷா கூற்றுப்படி தமிழ் கும்பமாசி முதல்நாள் மாசுசுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா நட்சத்திரமுங்கூடிய தினத்தில் சம்வத்ஸரா ஆண்டாக கிருதயுகத்தை தொடர்ந்து 12160 ஆண்டுகளுக்குப்பின் அதே மகாயுகத்தை தமிழ் மகர தை கடைசி நாள், ஒரு பௌஷ அமாவாசை திதியுடன் உடவத்ஸரா ஆண்டாக கலியுகத்தை முடித்துக் கணக்கிட்டுள்ளார்கள் என்பதையும் அறியமுடிந்தது.

இவ்வாறு ஒவ்வொரு மகாயுகத்தையும் வேதாங்க சோதிஷாப்படி தமிழ் கும்ப மாசி முதல் நாளில் தொடங்கி 12160 ஆண்டுகளுக்குப்பின் தமிழ் மகர தை கடைசி நாளுடன் முடித்துக் கணக்கிடுவதை அனுஷ்டானத்தில் கொண்டுள்ளார்கள் என்பதை அறிய முடிகின்றது.

இந்த வேதாங்க சோதிஷா மகாயுகத்தில் 1216 ஆண்டுகளுக்கு ஒரு அவதார புருஷர் வீதம், கிருதயுகத்தில் நால்வரும், திரேதாயுகத்தில் மூவரும், துவாபரயுகத்தில் இருவரும், கலியுகத்தில் ஒருவரும் தோன்றுவதாகவுள்ளது.

உண்மை இவ்வாறிருக்க இந்த 12160 ஆண்டுகளில் யுகசந்தி ஆண்டுகளான 160ஐ விடுத்து, எஞ்சிய 12000 ஆண்டுகளை மட்டும் நான்கு யுகங்களுக்கும் 4 : 3 : 2 : 1 என்ற விகிதத்தில் பிரித்து கி.பி. 400க்குப்பின் இவற்றை தேவமான ஆண்டுகளாகக்கொள்ள, அதை 360 ஆல் பெருக்கி வருவதுதான் மனுஷ்யமான

ஆண்டுகளெனக் கொண்டு கீழ்க்கண்டவாறு, தவறாகக் கணக்கிட்டு புராணங்களில் குறிப்பிட்டும் விட்டார்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கிருதயுகம் | 4800 x 360 | = | 1728000 | ஆண்டுகள் |
| 2. | திரேதாயுகம் | 3600 x 360 | = | 1296000 | ஆண்டுகள் |
| 3. | துவாபரயுகம் | 2400 x 360 | = | 864000 | ஆண்டுகள் |
| 4. | கலியுகம் | 1200 x 360 | = | 432000 | ஆண்டுகள் |
| | ஆக | 12000 | | 4320000 | ஆண்டுகள் |

இதனால் உண்மையில் 12160 ஆண்டுகள் என்பது 12000 ஆகி, அது 43 லட்சத்து 20 ஆயிரம் ஆண்டுகளாகக் கணக்கிடப்பட்டுவிட்டது.

உதாரணமாக உண்மையில் ஒரு ஆண்டுக்கு 365, 25625 நாட்களாகவும், ஒரு மாதத்திற்கு 29, 30, 31, 32 நாட்களாகவும் இருக்கும்போது, அதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுமளவுக்கு எவ்வாறு ? வழக்கமாக ஆண்டுக்கு 360 நாள் என்றும், மாதத்திற்கு 30 நாள் என்றும், கூறி வருகிறோமோ, அந்தவகையில்தான் 12160 ஆண்டுகளில் யுகசந்தி ஆண்டுகளான 160ஐ விடுத்து வழக்கில் 12000 ஆண்டுகள்தான் என எடுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதை அறியமுடிகிறது.

இந்த 12000த்தை அலங்காரமாக தேவமானமென்று கூற, இதை 360ஆல் பெருக்கிக் கணக்கிட்டது தவறே என்பதில் சந்தேகமில்லை.

அஃதே போன்று ஒரு மன்வந்தரத்திற்கு 72 மகாயுகங்கள் வீதம் 14 மன்வந்தரங்கள் கொண்ட ஒரு கல்பத்திற்கு 1008 மகாயுகங்களாக இருக்கும்போது, அதிலும் 8 மகாயுகங்களை விடுத்து, ஒரு கல்பத்திற்கு 1000 மகாயுகங்கள் என்றுதான் கூறிவருகிறோம்.

எனவே நாம் தேவமானமென்பதை அலங்காரக் கூற்றே எனக் கருதி செயல்பட வேண்டுமென்பது தெளிவாகிறது.



## அயனுக்கு ஒருநாள் அயனாம்சச் சுற்றாம்

இப்பிரபஞ்சத்தில் அனைத்துக் கோள்களும், நம் தாய்க்கோளான சூரியனை இடமாகச் சுற்றி வரும்போது, அனைத்துக் கோள்களையும் அரவணைத்துக் கொண்டுள்ள நம் சூரிய குடும்பம், இப்பிரபஞ்சத்தில் துருவ நட்சத்திரத்தை மையமாகக் கொண்டு வலமாகச் சுற்றுவதை விஷ்ணு புராணம் மூலம் அறிய முடிகின்றது.

இவ்வாறு இடம் வலம் மாறிச் சுற்றுவதால், ஒவ்வொரு ஆண்டிலும் இரவு பகல் சமமாகவுள்ள நாட்கள் பின்னோக்கி நகர, அதன் காரணமாக காலாந்தரத்தில் பருவகாலம் மாறுபடுவதை நம் மகரிஷிகள் உன்னிப்பாகக் கவனித்து, இந்த விண்ணில் நடக்கும் வியத்தகு மாற்றத்தை, அயனாம்சம் என அளவிட்டுள்ள விந்தையை நாம் காண முடிகின்றது.

இந்த அயனாம்ச இயக்கம் பின் நோக்கி நகர்ந்து, 180 டிகிரிகளை எய்தும் போது, ஒரு மகாயுகம் கொண்ட 12160 ஆண்டுகள் முடிவதையும், அடுத்து 180 டிகிரிகள் முடிந்து 360 டிகிரிகள் கொண்ட ஒரு முழுச்சுற்றை முடிக்கும்போது மேலும் ஒரு மகாயுகம் கொண்ட 12160 ஆண்டுகள் முடிவதையும் கணக்கிட்டு, முதல் மகாயுகத்தை பிர்மாவுக்கு பகல் என்றும், அடுத்த மகாயுகத்தை பிர்மாவுக்கு இரவு என்றும், ஆக பகலிரவு இரு மகாயுகங்கள் கொண்ட 24320 ஆண்டுகள்தான் பிர்மாவுக்கு ஒருநாள் என்றும், நம் மகரிஷிகள் நிர்ணயித் துள்ளார்களென்பதை நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

இதினின்று நம் சூரிய குடும்பம் தன்னைத்தானே ஒருமுறைச் சுற்றிக்கொள்ள, இரண்டு மகாயுகங்களை எடுத்துக்கொள்வதாக அறிய முடிகிறது. 12160 x 2 = 24320 yrs

எனவே நம் பூமிக்கு இரவு பகல் ஒரு நாள் போன்றும், சந்திரனுக்கு பூர்வ பக்ஷம், அமர பக்ஷம் ஆகிய இரண்டும் சேர்ந்து ஒரு மாதம் போன்றும், சூரியனுக்கு உத்திராயணம் தக்ஷிணாயணம் ஆகிய இரண்டும் சேர்ந்து ஒரு ஆண்டு போன்றும், நம் சூரிய குடும்பத்திற்கு பிர்மாவின் பகல், பிர்மாவின் இரவு ஆக இரண்டும் சேர்ந்து ஒரு நாளாகவும் காட்சி தருகிறது.

அயனாகிய பிர்மாவின் வயதை அளவிட, இந்த இயக்கம் துணைபுரிவதால்தான் நம் மகரிஷிகள் இதற்கு அயனாம்சம் என பெயரிட்டுள்ளார்கள் போலும்.

இவ்வாறு ஒரு மகாயுகம் பிர்மாவுக்கு பகல், அடுத்த ஒரு மகாயுகம் பிர்மாவுக்கு இரவு ஆக பகல் இரவு ஆகியஇரு மகாயுகங்கள்தான் பிர்மாவுக்கு ஒரு நாள் என இருக்கும்போது, இதையும் கி.பி. 400க்குப்பின் புராணங்களில் அலங்காரமாக. மிகைப்படுத்தி 1000 மகாயுகங்கள் பிர்மாவுக்கு பகல், அடுத்த 1000 மகாயுகங்கள் பிர்மாவுக்கு இரவு, ஆக பகலிரவு 2000 மகாயுகங்கள் பிர்மாவுக்கு ஒருநாள் என்றும் குறிப்பிட்டு விட்டுள்ளார்கள்.

இதனால் நம் புராணங்களில் ஒன்று ஆயிரமாகவும், சாதாரண இன்று நடைமுறையில் இருந்துவரும் ஒரு ஆண்டு. தேவமான ஆண்டாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது வெறும் அலங்காரக் கூற்றே என்பதை நாம் நினைவில் நிலை நிறுத்திக்கொள்ள வேண்டும்.

ஒரு மகாயுகத்திற்கு 10 அவதார புருஷர்கள் வீதம், பிர்மாவின் ஒரு நாளாம் இரு மகாயுகங்களில் 20 அவதார புருஷர்கள் தோன்றுவதை விஷ்ணு புராணம் உறுதிப்படுத்துகிறது.

இரு மகாயுகங்கள் கொண்ட பிர்மாவின் ஒரு நாளான 24320 ஆண்டுகளுக்கு ஒருமுறை. அனைத்துக் கோள்களின் இயக்கமும், அயனாம்சத்தின் இயக்கமும் ஒன்றுபடுவதால், இன்று நாம் காணும் புயல், வெள்ளம், பூகம்பம், வெப்பம், குளிர் பிரளயம் போன்ற இயற்கைச் சீற்றங்களையும் மற்றும் மக்கள் பெருக்கம், அராஜகம், அவதார புருஷர்களின் ஜனனம். அசுரர்கள் தோற்றம், பயங்கரப் போர், பண்பாடு, கலாச்சாரம், மொழி, உணர்வு போன்ற அனைத்தையும், மீண்டும் அயனுக்கு ஒரு நாளாம் 24320 ஆண்டுகளில் அதே சாயலில் நாம் காணமுடியும் என்பது உறுதியாகிறது.

இது சரித்திரம் திரும்புகிறது என்ற கோட்பாட்டை வலியுறுத்துவதாகிறது.

உலகம் தோன்றி வேதங்கள் நான்கும் தொகுக்கப்பட்ட நாட்கள் முதற்கொண்டே இந்து மதத்திற்கு, சைவமும், வைஷ்ணவமும் இணைபிரியா இரு அங்கங்களாகவே இருந்து வந்துள்ளதாக நாம் அறிய முடிகின்றது.



அதற்கு பிர்மாவின் பகல் பொழுதுதான் 27வது மகாயுகத்தில் சிவனும், முருகனும், பிர்மாவின் இராப்பொழுதான 28வது மகாயுகத்தில் ஸ்ரீராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் அவதரித்துள்ளதே சான்றாம். அடுத்து பிர்மாவின் பகல் வசந்த ருதுவிலும், பிர்மாவின் இரவு சரத் ருதுவிலும் ஆரம்பமாவதை ஆய்வில் அறிய முடிகின்றது.

இரு மகாயுகங்கள் கொண்ட 24320 ஆண்டுகளுக்கு அயனாம்சம் 360 டிகிரிகளாம் என்ற ரீதியில், ஒரு ஆண்டின் அயனகதி 53,28947368 விகலைகளாகின்றன.

இதை இன்றுவரை எவரும் சரியாக நிர்ணயித்துக் கொள்ளத்தவறியதற்கு, வேதகால வானியல் நம்மை விட்டு மறைந்து போனதே காரணமாம்.

நாம் ஒவ்வொரு ஏழு ஆண்டுகளுக்கு ஒருமுறை, ஆண்டு ஒன்றுக்கு 53,53,54,53,53,54,53 விகலைகள் என்ற ரீதியில் கூட்டி நிர்ணயித்து, இது போன்று 16 சுற்றுகளுக்குரிய 112 ஆண்டுகள் முடிந்தவுடன், 113 ஆம் ஆண்டுக்கு 53 விகலைகள், 114 ஆம் ஆண்டுக்கு 54 விகலைகள் என முடித்துக்கொண்டு, இதுபோன்றே ஒவ்வொரு 114 ஆண்டுகளுக்கு ஒருமுறை மேற்காணும் நியதியை அனுஷ்டிப்பதே நலமாம் என்பதை ஆய்வில் உறுதி செய்ய முடிகின்றது.

எனது கணிப்பில் கி.பி. 24.12.499 வியாழன் தமிழ் பிரமாதி ஆண்டு மார் தைத் திங்கள் முதல் நாளன்று அயனாம்சம் 0 டிகிரியாம் என்பதால், தற்போது கி.பி. 14.4.1998 செவ்வாய்கிழமையன்று அயனாம்சம் −22°, 10', 41" என அறிய முடிகின்றது. எனவே 13.4.2000 வியாழன் அன்று அயனாம்சம் −22°. 12'.28"

## மாக சைக்கிளின் மகத்துவம் காண்போம்

நம் மகரிஷிகள் காலத்தைக் கணக்கிட மாக சைக்கிள் என்ற அளவு கோலைப் பயன்படுத்தி வந்துள்ளார்களென்பதை இன்றுவரை எவரும் புரிந்து செயல்பட்டதாகத் தெரியவில்லை. இந்த மாக சைக்கிளை அடிப்படையாகக் கொண்டதுதான் மகாயுகம் என்பதை அறியலாம்.

ரிக்வேதம் வேதாங்க சோதிஷாவில் காணும் " மாக சுக்ல ப்ரபன்னா ஸ்ய பௌஷ கிருஷ்ண சமாப்பினா " என்ற வாக்கியம் வேதகால வானியலுக்கு ஆணிவேராம் என்பது உறுதி. இதன் விரிவுதான் மகாயுகம் ; இதன் பிரிவுதான் வேதாங்க சோதிஷாயுகா. இந்த ஒரே வாக்கியத்தில் நம் சூரிய குடும்ப இயக்கமே அடங்கியுள்ளதாக அறிய முடிகின்றது. அத்துடன் காலக் கணிப்பின் தொடக்கமாகவும் அது இடம் பெற்றுள்ளது. இந்த ப்ரம ரகஸ்யம் இதுவரை எவருக்கும் புரியாமல் போனது ஏன் ? என்று தெரியவில்லை.

ஒவ்வொரு மாக சைக்கிளும், தமிழ் கும்பமாசி முதல் நாள் மாக சுக்ல பிரதமை திதியும், சிரா விஷ்டா நட்சத்திரமுங்கூடிய தினத்தில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கி 160 ஆண்டுகளுக்குப்பின் தமிழ் மகர தை கடைசி நாள் ஓர் பௌஷ அமாவாசையுடன் உடவத்ஸரா ஆண்டாக முடிவதாகவுள்ள தென்பதுதான் மேலே கண்ட வாக்கியத்தின் சாராம்ஸம்.

அனைத்துக் கோள்களையும் ஆரம்பமாகும் அதே நிலைக்கு மீண்டும் கொண்டு வந்து நிலைநிறுத்துவது ஒரு மகாயுகத்தின் நியதியாம் போன்றே, திதி, நட்சத்திரம், யோகம் ஆகிய மூன்றையும் ஆரம்பமாகும் அதை நிலைக்கு மீண்டும் கொண்டு வந்து நிலை நிறுத்தும் பணியை இந்த 160 ஆண்டுகள் கொண்ட மாக சைக்கிள் வகிக்கிறது.

அந்த ஒரு காரணத்தால்தான் இந்த மாக சைக்கிள் வானியலுக்கு ஒரு சிறந்த ஒப்பற்ற அளவு கோலாகவுமுள்ளது.

இது மாக சுக்ல பிரதமை திதியை ஆரம்பமாகக் கொண்டதால்தான் இதற்கு மாக சைக்கிள் என பெயரிட்டுள்ளார்கள்.

ஒவ்வொரு மாக சைக்கிளிலும், 1920 சௌரமான மாதங்கள் கொண்ட 160 சௌரமான ஆண்டுகளும், 1979 சாந்திரமான மாதங்கள் கொண்ட 160 சாந்திரமான ஆண்டுகளும், 2139 நட்சத்திர மாதங்களும் 2299 யோகா சைக்கிள்களும் சம்மான அளவைப் பெறுவதுதான் இதன் சிறப்பு.



ஒரு மகாயுகத்தில் இதுபோன்று 76 மாக சைக்கிள்களும், பிர்மாவின் ஒரு நாளான இரு மகாயுகங்களில் 152 மாக சைக்கிள்களும் இடம் பெறுகின்றன. ஒரு மாக சைக்கிள் 58441 நாட்களை இம்மியும் மீறுவதில்லை.

இன்று நாம், ஆண்டு ஒன்றுக்கு 365.25 நாட்கள் எனக்கொண்டு, சாதாரண ஆண்டு 365 நாட்களென்றும், நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒரு ஆண்டை லீப் ஆண்டாகக் கொண்டு அதற்கு 366 நாட்களென்றும் கணக்கிடும் போது 160 ஆண்டுகளுக்கு 58440 நாட்கள்தான் ஆகின்றன.

ஒரு ஆண்டுக்குச் சரியாக 365.25625 நாட்கள்தான் என்பதால் அதில் 365.25 நாட்கள் போக, மீதியுள்ள .000625 நாள் என்பது 160 ஆண்டுகளில் அதாவது ஒரு மாக சைக்கிளில் ஒரு நாளாகக் கூடி 58441 நாட்களாகி விடுகின்றன.

ஒவ்வொரு மாக சைக்கிளிலும் சௌரமானமும், சாந்திரமானமும் ஒன்றுபடுவதால் 160 சௌரமான ஆண்டுகளும், 160 சாந்திரமான ஆண்டுகளும் சமமாகி விடுகின்றன.

இந்த ஒரு காரணத்தால்தான் எண்ணற்ற ஆண்டுகளுக்கு முன்போ அல்லது பின்போ, அந்தந்த தமிழ் மாதங்களில் உரிய நட்சத்திரத்துடன் பௌர்ணமி திதியை நாம் தொடர்பு கொண்டு காணமுடிகின்றது.

ஒருசில சமயங்களில் சூரிய சந்திர கதியால் உரிய நட்சத்திரத்திற்கு முன்பின் நட்சத்திரங்கள் சம்பந்தப்படுவதாக இருந்தாலும் மொத்தத்தில் ஒரு மாக சைக்கிள் என்பது நிலையான அளவாம் என்பது உறுதி.

வேதாங்க சோதிஷா நியதிப்படி காலத்தை துல்லியமாகக் கணக்கிட ஒவ்வொரு ஆண்டையும் தமிழ் கும்பமாசி முதல் நாளில் தொடங்கி அந்தந்த ஆண்டை தமிழ் மகர தை கடைசி நாளுடன் முடித்துக் கொண்டுள்ளார்கள்.

அவ்வப்போது இடையிடையே ஏற்பட்ட சகா ஆண்டுகளும் அவ்வாறே கணக்கிடப்பட்டு வந்துள்ளன.

கி.மு. 3101லிருந்து சாந்திரமான ரீதியில் சைத்ர சுக்ல பிரதமைதிதியினின்றும் கி.பி. 400க்குப்பின் சௌரமான ரீதியில் மேஷ சித்திரை முதல் நாளிலிருந்தும் காலத்தைக் கணக்கிடலானார்கள்.

## வேதம் கூறும் வேதாங்க சோதிஷாயுகா

அசுவதி முதல் ரேவதி முடியவுள்ள 27 நட்சத்திரங்களுக்குரிய காலத்தை நாம் ஒரு நட்சத்திர மாதமாகக் கொண்டுள்ளோம்.

அஃதே போன்று சுக்ல பிரதமை முதல் அமாவாசை முடியவுள்ள 30 திதிகள் கொண்ட காலத்தை ஒரு சாந்திரமான மாதமாகக் கொண்டுள்ளோம்.

நம் பூமியானது சூரியனை நீள்வட்டப் பாதையில் ஒருமுறைச் சுற்ற ஆகும் காலத்தைத்தான். ஒரு சௌரமான ஆண்டாகக்கொண்டு அதை 12 ராசி மண்டலங்களுக்கு ஈந்து ஒவ்வொரு ராசியையும் ஒரு சௌரமான மாதமாகக் கணக்கிட்டுள்ளோம்.

ஒரு சாந்திரமான மாதத்தின் உண்மையான அளவு 29.5305709954 நாட்களானபடியால் இதுபோன்று 12 சாந்திரமான மாதங்கள் கொண்ட ஒரு சாந்திரமான ஆண்டின் அளவு 354.366851944 நாட்களாகின்றன.

ஒரு சௌரமான ஆண்டைவிட, ஒரு சாந்திரமான ஆண்டு 10.889398056 நாட்கள் குறைவுபடுவதால், மூன்று ஆண்டுகளில் இந்த குறைவு 32.668194168 நாட்களாகும்போது. இது ஒரு சாந்திரமானமாத அளவை மீற, மூன்றாவது சாந்திரமான ஆண்டுக்கு ஒரு மாதத்தைக் கூடுதலாக வைத்து 13 சாந்திரமான மாதங்கள் ஒரு ஆண்டாம் என்ற நியதியில் அவ்வப்போது இதைச் சரிசெய்து கொள்கிறார்கள்.

இவ்வாறு சாந்திரமான ஆண்டுகளைக் கணக்கிட்டு, இது போன்ற 5 சாந்திரமான ஆண்டுகளைத்தான் ஒரு வேதாங்க சோதிஷாயுகா எனக் கொண்டுள்ளார்கள்.

இது போன்று 160 ஆண்டுகள் கொண்ட ஒரு மாக சைக்கிளில் 32 வேதாங்க சோதிஷாயுகாக்கள் இருப்பதாக அறிய முடிகின்றது.



ஒவ்வொரு மாக சைக்கிளிலும் 101 ஆண்டுகள், தலா 12 சாந்திரமான மாதங்களையும், எஞ்சிய 59 ஆண்டுகள், தலா 13 சாந்திரமான மாதங்களையும் பெறுவதால், ஒவ்வொரு மாக சைக்கிளிலுமுள்ள 32 வேதாங்க சோதிஷா யுகாக்களில் 1வது, 7வது, 13வது, 20வது, 26வது ஆகிய 5 வேதாங்க சோதிஷா யுகாக்களும் தலா 61 சாந்திரமான மாதங்களையும், எஞ்சிய 27 வேதாங்க சோதிஷா யுகாக்களும் தலா 62 சாந்திரமான மாதங்களையும் பெறுவதாகின்றன.

ஒவ்வொரு வேதாங்க சோதிஷா யுகாவிலுமுள்ள ஐந்து சாந்திரமான ஆண்டுகளை சம்வத்ஸரா, பரிவத்ஸரா இடொவத்ஸரா, அனுவத்ஸரா, உடவத்ஸரா என பெயரிட்டு வரிசைப்படுத்திக்கொண்டுள்ளார்கள்.

## பத்தொன்பது ஆண்டுகளும் பயன்தரும் சைக்கிளாம்

வானியலுக்கு 19 ஆண்டுகள் கொண்ட அளவும் பயன்தருவதாகவுள்ளது. ஒவ்வொரு 19 சௌரமான ஆண்டுகளில் 235 சாந்திரமான மாதங்களும், 254 நட்சத்திர மாதங்களும், 273 யோகா சைக்கிள்களும் சுமார் 4 மணி அளவு கூடுதல் குறைவு வித்தியாசத்தில் இருந்தாலும், 19 மாக சைக்கிள்கள் கொண்ட 3040 ஆண்டுகளில் எந்த ஒரு வித்தியாசமுமின்றி மேலேகண்ட மூன்றும் சமமான அளவைப் பெற்றுவிடுகின்றன.

ஒவ்வொரு மகாயுகத்திலும், இது போன்று, கிருதயுகத்தில் 256 திரேதாயுகத்தில் 192, துவாபரயுகத்தில் 128, கலியுகத்தில் 64 ஆக 640 சைக்கிள்கள் இடம் பெறுவதாகவுள்ளன.

## சாட்சியாய் நிற்பது சப்தரிஷி சைக்கிளே

இப்பிரபஞ்சத்தில், விண்ணிலுள்ள கோடிக்கணக்கான நட்சத்திரங்களில், நாம் வசிக்கும் இப்பூமிக்கு மிகவும் தொடர்புள்ளதாக நம் மகரிஷிகள் 27 நட்சத்திரங்களை மட்டுந்தான் தேர்ந்தெடுத்துள்ளார்கள்.

இந்த 27 நட்சத்திரங்களுக்கும் அதிதேவர்களாக சிவன், விஷ்ணு, இந்திரன், வாயு, வருணன், அக்னி, யமன், பிர்மா போன்ற 27 அதி தேவர்களையும் நிர்ணயித்துள்ளார்கள். ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் ஒரு அதிதேவர் என குறிப்பிட்டுள்ளார்கள்.

நீக்கமற நிறைந்து நிற்கும் பரம் பொருளினின்றும், அதிதேவர்கள் அளப்பரும் சக்தியைப் பெற்று, அவரவர்கள் அவரவர்களுக்குரிய நட்சத்திரங்களுக்கு அளிக்க அந்தந்த நட்சத்திரங்களின் வாயிலாக அனைத்துக் கோள்களும் பெற்று, அக்கோள்களினின்று நேரிடையாகவும், குறிப்பாக கோசார ரீதியில் சந்திரன் மூலமாகவும் இப்பூவுலகில் வாழும் மக்களும் அனைத்து ஜீவராசிகளும் அவரவர்களின் ஜனனகாலத்தைப் பொறுத்து பெற்றுய்யும் நேர்த்தியை நாம் காணமுடிகிறது.. இது நிற்க.

வடதுருவ நட்சத்திரத்திற்கு அருகிலுள்ள சிறப்புப் பெற்ற 7 நட்சத்திரங்கள், ஏழு ரிஷிகளின் பெயரை ஏற்று விண்ணில் கிழக்கிலிருந்து மேற்காக அதாவது துருவ நட்சத்திரத்தை வலமாகச் சுற்றி வருவதாக விஷ்ணு புராணம் மூலம் அறிய முடிகின்றது. இந்த ஏழு ரிஷிகள்தான் சப்தரிஷிகளாக வர்ணிக்கப்பட்டுள்ளார்கள்.

நம் மகரிஷிகள் காலத்தைக் கணக்கிட சௌரமானத்தையும், சாந்திரமானத்தையும் அடிப்படையாகக் கொண்டு நாள், வாரம், பக்ஷம், மாதம், ஆண்டு. யுகம் மகாயுகம், மன்வந்தரம், கல்பம், பிரளயம், மகாபிரளயம் போன்ற அளவுகளை நிர்ணயித்துக்கொண்டாலும், இவற்றிற்கும் மேலாக, இரவு நேரங்களில் வானமண்டலத்தைப் பார்த்து சப்தரிஷிகளின் இயக்கத்தைக் கொண்டு காலத்தைக் கணித்து வந்ததைப் புராணங்களிலும் கல்வெட்டுக் குறிப்புகளிலும் நாம் காண முடிகின்றது.

சப்தரிஷிகள் இப்பிரபஞ்சத்தில் வலம் வரும்போது ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 1000 சந்திரர்கள் காலம் வரை இருந்து பின்நோக்கி நகர்ந்து அடுத்த நட்சத்திரத்தில் பிரவேசிப்பதாகத்தான் ஒரிஜினல் புராணங்கள் கூறுகின்றன.

இதை எனது ஆய்வில் சரியாக 81 சௌரமான ஆண்டுகள்தான் என நிர்ணயிக்க முடிந்தது. இதைத்தான் மகரிஷிகள் சுமார் 1002



சாந்திரமான மாதங்கள் எனக் கூறுவதற்குப் பதிலாக, தோரயமாக 1000 சந்திரர்கள் என புராணங்களில் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்பதை அறிய முடிகின்றது.

ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 81 ஆண்டுகள் வீதம் 27 நட்சத்திரங்களைக் கடந்து ஒரு முழுச் சுற்றினை எய்தும் போது, சப்தரிஷிகள் 2187 ஆண்டுகளைக் கடப்பதாக அறியமுடிகின்றது.

இதனின்று ஒரு சுற்றுக்கு 2187 ஆண்டுகள்தான் என்பது உறுதியாகிறது.

வைவஸ்வதமனு சப்தரிஷி ஆண்டைத் தொடங்கியபோது சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் 76 ஆம் ஆண்டில் இருந்துள்ளதாக விஷ்ணு புராணம் கூறுகிறது. இதை ஆரம்பத்திலும் குறிப்பிட்டுள்ளேன்.

அடுத்து கி.மு. 2500க்கு முன் வாழ்ந்த வானநூல் வல்லுனரான விருத்த கர்க்கர் துவாபர – கலி சந்திப்பின் போது சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் இருந்துள்ளதாகக் கூறியுள்ளார்.

அடுத்து மகாராஷ்ட்ரா உறிசே போர்லா கல்வெட்டுக் குறிப்பில், சப்தரிஷிகள் யுதிஷ்ட்ரா சகா 3020ன் போது உத்திரபல்குனி (உத்திரம்) நட்சத்திரத்தில் பிரவேசித்ததாகக் காணமுடிகிறது.

எனது கணிப்பில் மேற்கூறிய மூன்றும் முறையே கி.மு. 15261, கி.மு. 4317, கி.மு. 120–119ஐக் குறிப்பதாகின்றன.

நடப்பு கி.பி. 2000த்தில் சப்தரிஷிகள் உறஸ்த்தம் நட்சத்திரத்தில் 69ஆம் ஆண்டில் இருப்பதாகக் காணமுடிகின்றது.

இதனின்று சப்தரிஷிகள் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் சரியாக 81 ஆண்டுகள் வீதம் தங்கி, பின் அடுத்த நட்சத்திரத்தில் பின் நோக்கிப் பிரவேசிப்பது உறுதியாகிறது.

எனது கணிப்பில் மேலே கூறப்பட்ட சப்தரிஷிகளின் நிலையை வைத்துக் கணக்கிட்ட போது கி.பி. 853, கி.பி. 3040 ஆகிய இரண்டு ஆண்டுகளும் சப்தரிஷிகளுக்கு அசுவதி நட்சத்திரத்தில் முதல் ஆண்டாம் என்பதால், இதை அடிப்படையாகக் கொண்டு

நாம் கி.மு. கி.பி. ஆண்டுகளில் எந்த ஒரு ஆண்டுக்கும் சப்தரிஷிகளின் நிலையை எளிதில் அறிந்துகொள்ள முடியும்

உண்மையில் துவாபர–கலி சந்திப்பான கி.மு. 4317ல் சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் 67ஆம் ஆண்டில் இருந்துள்ளதாகக் கூறிய விருத்த கர்க்கர் கூற்றை, தவறாக அந்த துவாபர–கலி சந்திப்பு கி.மு. 3101 எனக்கொண்டு, கி.பி. 400க்குப்பின் வாழ்ந்த நம் சித்தாந்த வானநூல் வல்லுனர்கள், அந்த கி.மு. 3101ல் சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் இருந்ததாக எண்ணி, அவர்கள் வாழ்ந்த போதுள்ள சப்தரிஷிகளின் நிலையை வைத்துக் கணக்கிட்டபோது, சப்தரிஷிகள் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 100 ஆண்டுகள் வரை இருப்பதாக நிர்ணயிக்க நேரிட்டதென்பதை அறிய முடிகின்றது.

அதன் காரணமாக 81 ஆண்டைத் தவறாக 100 ஆண்டுகளாக உயர்த்தி புராணங்களிலும் குறிப்பிட்டு விட்டார்கள்.

எப்போதுமே, வானியல் அளவுகளில் 100, 200, 500, 1000 என்ற நிலை இருப்பதற்கு ஆதாரமேதுமில்லை.

எனது ஆய்வில் வடதுருவ நட்சத்திரத்திற்கும் அங்கிரஸ் நட்சத்திரத்திற்கும் நேர் தெற்கே எந்த நட்சத்திரம் உள்ளதோ, அதில்தான் சப்தரிஷிகள் வீற்றிருப்பதாகக் கொள்ள வேண்டும் என்பதை வரலாறு மற்றும் கல்வெட்டுக் குறிப்புகள் வாயிலாக ஊர்ஜிதம் செய்ய முடிகின்றது.

இந்த சப்தரிஷி சைக்கிளைப் பற்றி இன்றுவரை நம்நாட்டு மேல்நாட்டு வானநூல் வல்லுனர்கள் ஆய்வு மேற்கொண்டதாகத் தெரியவில்லை. அதைப்பற்றி யாரும் சிரத்தை எடுத்துக் கொண்டதாகவும் காணோம்.

ஆண்டொன்றுக்கு சப்தரிஷிகள் சுமார் 10 கலைகள் அளவுக்கு நகர்வதால் இதைப்பற்றி ஆராய யாரும் முற்படவில்லை என்று நினைக்க வேண்டியுள்ளது. ஆண்டொன்றுக்கு அயன கதி சுமார் 54 விகலைகள் என்பதையே விட்டுவைக்காத நம் மகரிஷிகள் ஆண்டொன்றுக்கு சப்தரிஷிகளின் இயக்கமான சுமார் 10 கலைகளையா விட்டுவைப்பார்கள்.



இது ஒன்றே வானியல்கலை நம் பாரத தேசத்தில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தேர்ந்த தெளிந்த ஒன்றே என்பதற்குச் சான்றாம்.

என்னால் நிர்ணயிக்கப்பட்ட சப்தரிஷி ஆண்டுத் தொடக்கமான கி.மு. 15261, துவாபர – கலி சந்திப்பான கி.மு. 4317, உறிசே போர்லா கல்வெட்டுக் குறிப்பான கி.மு. 119 ஆகிய மூன்று ஆண்டுகளுக்கும் சப்தரிஷிகளின் நிலை உறுதியாவதால், நான் சப்தரிஷிகள் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 81 ஆண்டுகள் வரை இருப்பதாகக் கொண்டது. ஒரு மகாயுகத்திற்கு 12160 ஆண்டுகள்தான் என்பதை உறுதிப்படுத்துவதாக உள்ளது.

எனவே நான் கொண்டுள்ள மகாயுக அளவுக்கு சப்தரிஷி சைக்கிள் சாட்சியாய் உள்ளதென்பது தெளிவாம்.

சப்தரிஷி சகாப்தத் தொடக்கமான கி.மு. 15261 லிருந்து ஒரு சுற்றுக்கு 2187 ஆண்டுகள் வீதம், சப்தரிஷி சைக்கிளில் 7 சுற்றுக்களை முடித்துக்கொண்டு, நடப்பு 2000த்தில் நாம் 8வது சுற்றில் 1952ஆம் ஆண்டில் வசித்து வருகிறோம் என்பதை உறுதியெனக் கொள்ள முடிகின்றது.

இதினின்று நம் மகரிஷிகளால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வடித்துக் கொடுக்கப்பட்ட அளவுகோல்களில், இரு மகாயுகங்கள் கொண்ட அயனுக்கொருநாளும், மகாயுகமும், மாக சைக்கிளும். வேதாங்க சோதிஷா யுகாவும், சப்தரிஷி சைக்கிளும் எவ்வளவு தூரம் வானியலில் பங்கு வகிக்கின்றன என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகின்றதல்லவா ?

எனது கணிப்பில் வேதம் தோன்றிய காலம் அறுதியிட்டு உறுதி கூறுவதற்கில்லை. அது காலம் கடந்தது, கணிப்பிற்கு அப்பாற்பட்டது ஆதியந்தமற்றது அடிமுடி காணப்படாதது என்பதாம்.

## இந்தியாவில் பிறப்பது முன்செய் தவமே

சுவாமி விவேகானந்தர் நம் பாரத தேசத்துப் புராதன வரலாற்றை எவ்வாறு ? தொகுத்தெழுத வேண்டுமென்பதற்கு தக்க பல அறிவுரைகளைத் தந்துள்ளார்.

அவற்றை அடிப்படையாகக் கொண்டு அயரா முயற்சியின் காரணமாக மறைந்து கிடந்த வேதகால வானியல் நியதிகளையும் அவற்றின் உண்மையான அளவுகளையும் தேர்ந்தெடுத்து, அதன் மூலமாகத்தான் உலகிலேயே முதன்மையான வரலாற்றைப் பெற்றுள்ளது. நம் பாரத தேசமே என்பதை உணர முடிந்தது.

நம் பாரத தேசத்துப் புராதன வரலாறு. மேல் நாட்டவரானோ, அல்லது எந் நாட்டவரானோ மறுக்கப்பட்டு, அது மறைக்கப்பட்டு அல்லது ஒதுக்கப்பட்டு, இல்லை குழிதோண்டி புதைக்கப்பட்டு விட்டால் கூட, என்றோ ஒருநாள் அது உயிர்ப்பித்து புத்துணர்வு பெற்று மீண்டும் உலக அரங்கில் வெற்றி நடைபோடுமளவுக்கு வீறிட்டெழும் என்ற உத்திரவாதத்தை சுவாமி விவேகானந்தர் தெள்ளத் தெளிவாய் அழுத்தம் திருத்தமாய்க் கூறியுள்ளார்.

அவ்வாறு, கூறக் காரணம், நம் வேத புராண இதிகாசங்களில் மறைந்து கிடக்கும் உண்மைப் பொருளும், வானியல் கலையும், சோதிடக் கலையும் பின்னொரு நாள் உண்மையான இந்திய தேச வரலாற்றை விஞ்ஞான ரீதியாகப் புதுப்பித்து புது மெருகிட்டெழுதத் துணை நிற்கும் என்ற ஆழ்ந்த கருத்தினாலாம் என்பது உறுதி.

உலகம் தோன்றி பலகோடி ஆண்டுகளுக்குப்பின், மகாபிரளயம், பிரளயம் ஆகியவற்றை மட்டும் விடுத்து, 6 கல்பங்களில் 4வது கல்பமான வராக கல்பத்தில், 14 மன்வந்தரங்களில் 8வது மன்வந்தரமான வைவஸ்வத மன்வந்தரத்தில், அயனுக்குரிய 36 நாட்களில் 14வது நாளில் பிர்மாவின் பகல் பொழுதிற்குரிய 27வது மகாயுகத்தின் நான்கு யுகங்களில் கடைசி யுகமான கலியுகத்தில், இற்றைக்குச் சற்றேற பதினெட்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய ஸ்ரீ முருகன் காலத்தினின்று வரலாற்றைத் தரவல்ல நான்கு வேதங்களும் உபநிஷத்துகளும், சற்று விளக்கமாக இதிகாசபுராணங்களும், சங்ககாலத் தமிழ் இலக்கியங்களும், குருபரம்பரா ஏடுகளும் நம் பாரத தேசம் ஒன்றில்தான் இன்றுவரை பேணிப்பாதுகாத்து வரப்பட்டுள்ளன என்பதால், இதைவிட நம் பாரத தேசத்துப் புராதன வரலாற்றை நிர்ணயிக்க வேறு எதுவுமே தேவையில்லையென்பது எனது பணிவான கருத்தாம்.

எவ்வளவோ அவதார புருஷர்களும், மகரிஷிகளும் மகான்களும் தீர்க்க தரிசிகளும் தோன்றிய இப்பாரத பூமியில் நாம் மீண்டும் மீண்டும் பிறப்பதற்கு மாதவம் செய்திடத்தான் வேண்டும்.

## இனியன செய்தோர்க்கு ஏனிந்த சிறைவாசம் ?

இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க, நம் பாரத பூமியில் அவதரித்த ஸ்ரீ முருகன், ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன் ஆகியோர் காலத்தை; கி.பி. 400க்குப் பின் புராணங்களில் அலங்காரமாக ஒன்றை ஆயிரமாகவும், சாதாரண ஆண்டைத் தேவமான ஆண்டாகவும் மிகைப்படுத்தப்பட்டு விட்டதாலும், ரிக்வேதத்தில் வேதாங்க சோதிஷா கூறும் வானியல் நியதிப்படி கி.மு. 3101னுடன் முடிந்து விட்ட கலியுகத்தை அதற்கு முரணாக மீண்டும் கி.மு. 3101லிருந்தே கணக்கிட்டு எழுதப்பட்டுவிட்ட புராணங்களாலும் அறிந்துகொள்ள இயலாமற் போயிற்றென்பது உண்மை. உறுதியும் கூட.

இன்றுள்ள புராணங்களின்படி மகாயுகத்திற்குரிய ஆண்டுகளை, நாம் உண்மையென்று ஒப்புக்கொண்டு விட்டால், ஸ்ரீ ராமன் சுமார் 18 லட்சம் ஆண்டுகளுக்கு முன் பிறந்தவராகிறார்.

வேதம் கூறும் வானியல் நியதிப்படியும், வால்மீகி கூறும் கால நேர அளவின்படியும் எனது கணிப்பில் ஸ்ரீராமன் 12200 ஆண்டுகளுக்கு முன் பிறந்தவரேயாம் என்பது உறுதி.

உண்மையில் கி.மு. 2.4.509ல் பிறந்த ஆதிசங்கரரையே நம்பாமல் அவர் கி.பி. 788ல் பிறந்ததாக வரலாற்றை எழுதிவிட்ட நம் வரலாற்றுப் பேராசிரியர்கள், ஸ்ரீராமனை எங்கே ? எவ்வாறு ? நம்புவார்கள்.

அனைத்திற்கும் காரணம் கி.பி. 400க்குப்பின் மாறுபட்ட புராணங்களால் நம் வேதகால வானியல் திசைமாறி மறைந்து போனமையேயாம். இதனால் ஸ்ரீ முருகன், ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன் ஆகிய மூவருமே கற்பனை நாயகர்களாகக் கருதப்பட்டும் விட்டனர். அதனால் வரலாற்றில் அவர்கள் இடம் பெறாதும் போயுள்ளனர்.

எனது கவலையெல்லாம் கற்பனை நாயகர்களின் வரலாற்றை கதையாகப் படித்து ரசிப்பதை விட, அவர்கள் மூவரும் நம் பாரத பூமியில் தோன்றி வாழ்ந்து வழிகாட்டி மறைந்துவிட்ட வரலாற்று நாயகர்களே என்பதை நிரூபித்துவிட்டால் கந்தபுராணம், இராமாயணம், மகாபாரதம் ஆகிய மூன்றுக்கும் இன்னும் புகழ் சேருமே என்பதுதான்.

அடுத்து வைணவப் பெரியோர்களால் பாதுகாக்கப்பட்டு இன்று நம்மிடையே இருந்துவரும் குரு பரம்பரா ஏடுகள், ஆழ்வார்கள், ஆச்சாரியார்கள் அனைவரின் ஜன்ன காலக் குறிப்பை தெள்ளத் தெளிய கூறுவனவாகவுள்ளன.

அதன்மூலம் ஆழ்வார்கள் காலத்தை மட்டுமே, நாம் கி.மு. 4203 முதல் கி.மு. 2704 வரையுள்ள சுமார் 1500 ஆண்டுகள் கொண்ட காலமாக அறிய முடிகின்றது.

இவர்களில் முதல் நான்கு ஆழ்வார்களின் காலத்திலேயே பட்டினத்தார், வாழ்ந்ததாகக் கொள்ள முடிகின்றது. மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள் எழுதி விட்ட, இந்திய தேச வரலாற்றில் ஏற்பட்ட நம்பிக்கை நமக்கு சங்க இலக்கியங்களிலும் குருபரம்பரா ஏடுகளிலும் ஏற்படாமற் போனது ஏன்? என்று புரியவில்லை.

சிதைவுற்ற புராணங்களால் கி.பி. 400க்குப் பின் கி.மு. 25–2–3101 செவ்வாய்க்கிழமையிலிருந்து கலியுகம் கணக்கிடப்பட்டவுடன், அத்தேதிக்கு முன் துவாபரயுகமாகக் கருதி, அதற்கு 8 லட்சத்து 64 ஆயிரம் ஆண்டுகளெனக்கொள்ள, அத் துவாபரயுகம் கி.மு. 867101லிருந்து ஆரம்பமாவதால் அதினின்று முதல் 5 ஆழ்வார்களின் காலத்தைக் கணக்கிட்டு அவர்கள் ஐவரும் துவாபரயுகத்தில் பிறந்தவர்களாகவும், கி.மு. 25.2.3101 லிருந்து கீழே கலியுகமெனக் கொண்டு எஞ்சிய ஏழு ஆழ்வார்களையும் கலியுகத் தோன்றல்களாகவும் குரு பரம்பரா ஏடுகளில் குறிப்பிட்டு விட்டார்கள் என்பதைக் காணமுடிகின்றது.



தேனினுமினியத் தீந்தமிழால் திருவாசகம் தந்த மாணிக்கவாசகர், தேவாரம் பாடிய அப்பர், சம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார், அமிழ்தினுமினிய அழகு தமிழால் பக்திச்சுவை சொட்டச் சொட்ட பாசுரங்கள் பாடிய ஆழ்வார்கள் பன்னிருவர் ஆகிய அனைவரையும், அவர்கள் வாழ்ந்த காலத்தினின்று சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்குக் கீழே கொண்டு வந்து, ஒரு தாய் வயிற்றுப்பிள்ளைகள் போன்று கி.பி. 601 முதல் கி.பி. 900 முடியவுள்ள வெறும் முன்னூறு ஆண்டுகளுக்குள் கான மூழ்பட்டது கொடுமையினும் கொடுமையே.

இந்தியா முழுவதிலுமுள்ள சிவ வைஷ்ணவ க்ஷேத்திரங்களைக் கண்டு களித்து திருவாசகம், தேவாரம் நாலாயிர திவ்ய பிரபந்தங்கள் ஆகிய அருட் சுவை தரும் பாடல்களை அருளி இனியன செய்தோர்க்கு நாம் தந்த பரிசா ? இந்த 300 ஆண்டு சிறைவாசம் !

## பழையன மறப்போம் புதியன தொகுப்போம்

வானியல் தரும் வரலாற்றுக் குறிப்புகளின்படி கி.மு. 15261க்கு முன்னுள்ள 27வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகத்தில் ஸ்ரீ முருகன் தோன்ற, அப்போது கடல் கொண்ட தென் மதுரையைத் தலைநகராகக் கொண்டு தென் தமிழகத்தில் பாண்டிய மன்னர்கள் அரசோச்சியபோது அகஸ்த்தியர் தலைமையில் முதல் தமிழ்ச் சங்கம் அமைய, அவ்வாறு முதல் இடை கடை மூன்று தமிழ்ச் சங்கங்களும் சுமார் 179 மன்னர்களின் ஆட்சியில் சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு மேல் நடந்ததாகக் களவியல் உரை கூற, வரலாறு தரும் வைவஸ்வதமனு வடக்கே அயோத்தியை தலைநகராகக் கொண்டு கி.மு. 15261லிருந்து ஆட்சிபுரிய அவருக்குப்பின் மச்சம், கூர்மம், வராகம் வாமனம், நரசிம்மம் போன்ற அவதாரங்கள் நிகழ அடுத்து ஆரம்பமான திரேதாயுகத்தில் கி.மு. 10205ல் ஸ்ரீராமன் தோன்ற அவர் வரலாற்றைத் தந்த வால்மீகி ராமாயணத்தில், மேலே கூறப்பட்ட அனைத்தும் இழையோடுவதை நாம் காணமுடிகின்றது.

அடுத்துள்ள துவாபரயுகம் முடிந்து, அதற்கடுத்து கலியுகம் கி.மு. 4317ல் ஆரம்பமாக அக்கலியுகத்தில் ஆரம்பகாலத்தில் முதல் 5 ஆழ்வார்கள் தோன்ற, பின் அக்கலியுகத்தில் 1132ஆம் ஆண்டில்

ஸ்ரீகிருஷ்ணன் கி.மு. 3185ல் அவதரிக்க, அவர் அர்ச்சுனனுக்குச் சாரதியாக நின்று மகாபாரதப் போரை கி.மு. 3139ல் தொடர, அப்போரில் பாண்டவர்களுக்கு வெற்றி தேடித்தந்து யுதிஷ்டிரருக்கு முடிசூட்டி கி.மு. 3138ல் பிதாமகர் பீஷ்மரின் நல்லடக்கத்தை முடித்துவிட்டு துவாரகைக்குச் சென்று சுமார் 32 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து, தனது 84ஆம் வயதில் கி.மு. 3101ல் பரமபதம் அடைந்துள்ளதை, வியாசர் தந்த மகாபாரதம் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது.

அந்த ஸ்ரீ கிருஷ்ணன் பரமபதம் அடைந்த நாளினின்று ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா தோன்ற அத்தேதியினின்று 43 நாட்களுக்குப்பின் அக்கலியுகத்திலேயே நம்மாழ்வார் தோன்ற பின்னுள்ள ஆறு ஆழ்வார்களின் காலத்தை அதற்கடுத்த கிருதயுகத்தில் வரிசையாக கி.மு. 3074 முதல் கி.மு. 2704 வரைக் காணமுடிகின்றது.

அதன்பின் மகாவீரர், பின் கௌதம புத்தர் இறுதியாக ஆதிசங்கரர் கி.மு. 509ல் தோன்றியுள்ளதையும் நாம் காணமுடிகின்றது.

இத்தகைய உயரிய பண்பட்ட பாரம்பரியம்மிக்க கி.மு. 16500லிருந்து கி.மு. 500 வரையுள்ள சுமார் 16 ஆயிரம் ஆண்டுகள் கொண்ட உன்னத வரலாற்றை, கி.பி. 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் உள் நுழைந்த மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள் கற்பனையாக எழுதிவிட்ட வரலாற்றை உண்மையென ஒப்புக்கொண்டு உதாசீனம் செய்ததால், தமிழர்தம் தொன்மையைச் சித்தரிக்கும் சங்க இலக்கியத்திற்கும் திருவாசகம், தேவாரம், நாலாயிர திவ்ய பிரபந்தம் ஆகிய அனைத்துக்கும் பங்கம் நேரிட்டதுதான் மிச்சம்.

அத்துடன் கி.மு. 10000க்கு முற்பட்ட கல்வெட்டுக் குறிப்புகளையெல்லாம் கி.பி. ஆண்டுகளுக்குரியதாகவே கணித்ததோடு கணிக்கவும் நேர்கிறது.

எனவே இன்றுள்ள கற்பனையான இந்திய தேசத்து வரலாற்றை மறந்துவிட்டு, நம் வேதகால வானியலை அடிப்படையாகக் கொண்டு, ஒரு புதிய வரலாற்றைத் தொகுத்தெழுத முனைவோமாக.



## வானியல் மூலம் வரலாற்றுக் குறிப்புகள்

### முருகன் வாழ்ந்தது முந்திய கலியுகம்

நம் மகரிஷிகளால் கணிக்கப்பட்ட வேதகால வானியலை அடிப்படை ஆதாரமாக் கொண்டு, எனது ஆய்வைத் தொடங்கிய போது, பிர்மாவின் பகல் பொழுதான 27வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுகம் வேதாங்க ஜோதிஷ நியதிப்படி கி.மு. 5.10.16477 புதன்கிழமை தமிழ் தாரண ஆண்டு கும்பமாசி முதல் நாளாக பகுள சதுர்த்தி திதியும் உத்திர பல்குனி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் ஆரம்பமாகி யுகசந்தியுள்பட 1216 ஆண்டுகளுக்குப் பின் அக்கலியுகம் கி.மு. 12.10.15261 வியாழக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு மகர தைத்திங்கள் கடைசி நாள் ஓர் பௌஷ அமாவாசையுடன் முடிய அன்றோடு 27வது மகாயுகம் முடிந்துள்ள தென்பதை அறிய முடிகின்றது.

அக்கலியுகத்திற்கு முந்திய துவாபரயுக இறுதியில் தாருகா வனத்து மகரிஷிகள், அடுத்து வரவுள்ள கலியுகத்தில் அரக்கர்கள் பலரின் அச்சுறுத்தல்களுக்கு அனைத்து மக்களும் ஆளாகப் போகவுள்ள தங்களின் கவலையை மகாவிஷ்ணுவிடம் தெரிவித்தபோது, அவர் தான் அக்கலியுகத்தில் ஸ்ரீ ஸ்கந்தனாக (ஸ்ரீமுருகன்) அவதரிக்கப் போவதாகக் கூறியுள்ளதை புராணங்கள் வாயிலாக அறிய முடிகிறது.

எனவே, மேலே கூறப்பட்ட 27வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகத்தின் அவதார புருஷன் ஸ்ரீ ஸ்கந்தனே ஆம் ஸ்ரீ முருகனே என்பது தெளிவாம்.

அவ்வாறு ஸ்ரீ முருகன் அவதரித்த அக்கலியுகத்தில் கடல் கொள்ளப்பட்ட தென் தமிழகத்தில் பாண்டியர்கள் தென் மதுரையைத் தலைநகராகக் கொண்டு சீருஞ்சிறப்புமாக அரசோச்சியபோது முதல் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டு அதன்பின் இடை கடை ஆகிய மூன்று தமிழ்ச் சங்கங்கள் 179 மன்னர்களின் ஆட்சியில் சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு மேல் இயங்கியதாக சங்க இலக்கியங்களில் ஒன்றான களவியல் உரையும் மற்றும் இறையனர் அகப்பொருளும் உறுதிப்படுத்துகின்றன என்பதை மேலேயும் நினைவு கூர்ந்துள்ளேன்.

அப்போதே அகஸ்த்தியரால் அகஸ்த்தியம் என்ற இலக்கண நூல் எழுதப்பட்டு முதல் தமிழ்ச்சங்கம் நிறுவப்படுமளவுக்கு இருந்துள்ளதென்றால், அதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழகத்தில் மக்களிடையே நாகரிகம் மலர்ந்து தமிழ் பேசும் மொழியாகவும், பின் எழுத்து வடிவமும் பெற்று வளர்ந்து வந்திருக்க வேண்டுமென்பது மிகத்தெளிவாம்.

இதினின்று சுமார் கி.மு. 16500க்கு முற்பட்ட ஒரு சில ஆயிரம் ஆண்டுகளினின்றே தமிழ் மொழி மக்களிடையே நடைபயின்று வந்துள்ளதாகக் காணமுடிகிறது.

அந்த 27வது மகாயுகத்தில் கடைசி யுகமான கலியுகத்தின் அவதார புருஷனான ஸ்ரீமுருகன் அப்போது மக்களை துன்புறுத்தி வந்த அரக்கர்கள் பலரைக் கொன்று குவித்து, துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் புரிந்துள்ளதை, கந்த புராணம் கூறுகிறது.

அக்கலியுக இறுதியில் அனைத்து கோள்களும் கி.மு. 26.9.15265 வியாழன் தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 14ஆம் நாள் ஓர் பௌஷ அமாவாசை தினத்தன்று 300 டிகிரிக்கு இருமருங்கிலும் 120 டிகிரிகளுக்குள் இடம் பெற, அன்றோடு அக்கலியுகம் கோள்கள் ரீதியாக முடிந்துள்ளது.

### கோள்கள் ரீதியாகக் கிருதயுகத் தொடக்கம்

அதற்கு மறுநாள் கி.மு. 27.9.15265 வெள்ளிக்கிழமை தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 15ஆம் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் திருவோணம் நட்சத்திரமும் கூடிய தினத்தினின்று அடுத்த பிர்மாவின் இராப்பொழுதான 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகம் கோள்கள் ரீதியாக ஆரம்பமாகியுள்ளது.

### வைவஸ்வத மன்வாதி தினம்

அத்தேதியினின்று 50 சாந்திரமான மாதங்களுக்குப் பின்னர்தான் அதே 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகம் வேதாங்க சோதிஷாப்படி, கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு கும்பமாசி முதல் நாளினின்று ஆரம்பமாகவுள்ளதென்றாலும், முந்திய கலியுகத்தில் ஒரு பேரழிவின் விளிம்பில் நிலை குலைந்த நம் பாரத பூமியை சீர்திருத்தி செப்பஞ் செய்து மக்களை நல்ல நிலைமைக்குக் கொண்டுவர நம் மகரிஷிகள் கி.மு. 27.9.15265 வெள்ளிக்கிழமையினின்று 7ஆம் நாளான கி.மு. 3.10.15265 வியாழக்கிழமையை புனித நாளாகக் கொண்டு



அதற்குரிய தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 21ஆம் நாள் மாக சுக்ல சப்தமி திதியும் அசுவதி நட்சத்திரமுங் கூடிய நன்னாளில் வரலாறு தரும் முதல் மனிதகுலத் தோன்றலான வைவஸ்வத மனு தலைமையில் ஒன்றுகூடி அந்நாளை வைவஸ்வத மன்வாதி தினமாகக் கொண்டாடியிருக்க வேண்டுமென்பது புலனாகிறது.

## *சப்தரிஷி சகாப்தத் தொடக்கம்*

அந்த கி.மு. 3.10.15265 வியாழனின்று சுமார் நான்காண்டு காலம் வரை நம் மகரிஷிகள் பாரம்பரியம் மிக்க நம் இந்து கலாச்சாரம் சிதிலமடையா வண்ணம் பாரத தேசத்துப் பண்பாட்டை பேணிப் பாதுகாக்க நீதி நெறிகளை வகுத்து கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு கும்பமாசி முதல்நாள் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங் கூடிய தினத்தில் வைவஸ்வத மனுவிடம் அளித்து அன்றே அவருக்கு முடிசூட்டி பாரத தேசத்தின் ஆட்சிப் பொறுப்பை அவர் வசம் ஒப்படைத்து அன்று முதல் சப்தரிஷி ஆண்டைக் கணக்கிட்டு வந்துள்ளார்கள் என்பதை வரலாற்றுக் குறிப்புகளின் வாயிலாக உறுதிசெய்ய முடிகின்றது.

### கிருதயுக ஆரம்பம்

அவ்வாறு கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமையினின்று சரத் ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கிய சப்தரிஷி ஆண்டின் தொடக்கம் பிர்மாவின் இராப்பொழுதான 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகத்தின் ஆரம்பமே என்பதை உறுதியெனக் கொள்ள முடிகின்றது.

அன்றே முதல் மாக சைக்கிள் ஆரம்பமாகியுள்ளது. அத்துடன் அப்போது சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் 76ஆம் ஆண்டில் இருந்துள்ளதாகவும் விஷ்ணு புரர்ணம் கூறுகிறது.

அவ்வாறு வைவஸ்வத மனுவால் தொடங்கப்பட்டக் கிருதயுகத்தில் மச்சம், கூர்மம், வராகம், வாமனம், நரசிம்மம் போன்ற அவதாரங்கள் நிகழ, அக்கிருதயுகம் யுகசந்தியுள்பட 4864 ஆண்டுகளுக்குப்பின் கி.மு. 11.11.10397 புதன்கிழமை தமிழ் குரோதி ஆண்டு மகர தைத்திங்கள் கடைசி நாளுடன் முடிந்துள்ளது.

## திரேதாயுகம் ஆரம்பம்

அதற்கடுத்த திரேதாயுகம் கி.மு. 12.11.10397 வியாழன் தமிழ் குரோதி ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக பகுள சதுர்த்தி திதியும் உத்திர பல்குனி நட்சத்திரமும் கூடிய தினத்தினின்று ஆரம்பமாகியுள்ளது.

## ஸ்ரீராமன் ஜனனம்

அந்த திரேதாயுகத்தில்தான், ஸ்ரீராமன் அயோத்தியை ஆண்ட தசரத மன்னனுக்கு அன்பு மகனாக கி.மு. 17.01.102025 திங்கள்கிழமை தமிழ் நள ஆண்டு மேஷ சித்திரை 6ஆம் நாள் புனர்பூச நட்சத்திரமும் சைத்ர சுக்ல அஷ்டமி பின் நவமி திதியுடன் கூடிய சுபதினத்தில் அயோத்தியில் பகல் மணி 12.00 அளவில் அவதரித்துள்ளார்.

அப்போது சப்தரிஷிகள் பரணி நட்சத்திரத்தில் 42ஆம் ஆண்டில் இருந்துள்ளார்கள். அதாவது பரணி மத்திமமாம் என்பது இங்கே குறிப்படத்தக்கது.

ஸ்ரீராமன் கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமையின்று தொடங்கப்பட்ட சப்தரிஷி சகாப்தத்தில் 5056ஆம் ஆண்டிலும், மாக சைக்கிள் ரீதியாக 32வது மாக சைக்கிளில் 96ஆம் ஆண்டிலும், அந்த திரேதாயுகத்தில் 192ஆம் ஆண்டிலும், வால்மீகியால் கூறப்பட்ட கோள்களின் நிலையில் அந்த திரேதாயுகத்திற்குரிய மூன்று அவதார புருஷர்களில் முதல் அவதார புருஷராக அவதரித்துள்ளார்,

## வனவாசத் தொடக்கமும் அயோத்திப் பிரவேசமும்

ஸ்ரீராமன் தனது 24ஆம் வயதில் கி.மு. 20.12.10182 புதன்கிழமை தமிழ் பிரமாதி ஆண்டு மீன பங்குனி 8ஆம் நாள் சைத்ர சுக்ல பஞ்சமி திதியன்று வனவாசத்லித் தொடர்ந்து கி.மு. 08.01.10167 வெள்ளிக்கிழமை தமிழ் விஜய ஆண்டு மீன பாங்குனி 28ஆம் நாள் பல்குனி அமாவாசை தினத்தில் இராவண வதத்தை முடித்து கி.மு. 13.01.10167 புதன்கிழமை தமிழ் ஜய ஆண்டு மேஷ சித்தரை 2ஆம் நாள் சைத்ர சுக்ல சதுர்த்தி பின் பஞ்சமி திதியும் கூடிய தினத்தில் பரத்வாஜர் ஆஸ்ரமத்தில் தங்க, அன்றோடு 14 ஆண்டுகள் கொண்ட வனவாசம் சாந்திரமான ரீதியில் முடிவுற மறுநாள் கி,மு, 14.01.10167 வியாழன் மாலை அயோத்தியில் பிரவேசித்துள்ளார்.



## ஸ்ரீ ராமன் பட்டாபிஷேகம்

அதற்கு மறுநாள் கி.மு. 15.1.10167 வெள்ளிக்கிழமை தமிழ் ஜய ஆண்டு மேஷ சித்திரை 4ஆம் நாள் சைத்ர சுக்ல சப்தமி திதியும் புனர்பூசம் பின் பூசம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் பட்டாபிஷேகமும் நடக்க அதன்பின் ஸ்ரீராமன் சுமார் 11 ஆண்டுகள் அரசோச்சியதாக அறிய முடிகின்றது.

எப்போதுமே, நம் மகிரிஷிகள் காலத்தைத் துல்லியமாகக் கணக்கிட்டறிய சௌரமானத்தையும், லௌகீக காரியங்களுக்கு சாந்திரமானத்தையும் அனுஷ்டிப்பதை வழக்கத்தில் கொண்டுள்ளார்கள் என்பதை. அறிய முடிகின்றது.

அதன்படி ஸ்ரீராமனின் 14 ஆண்டுகள் கொண்ட வனவாசம் சௌரமானத்தை விட சாந்திரமானம் அப்போது சுமார் 25 நாட்கள் நீடித்துவிட சௌரமான ரீதியிலும் சாந்திரமான ரீதியிலும் 14 ஆண்டுகள் முடிந்துவிட்டதென்ற தன் கருத்தை, வால்மீகி "பூர்ணே சதுர்த்தஷ வர்ஷே" என ஐயந்திரிபற அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

இதினின்று பன்னீராயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே வானியல் கலை நம் வால்மீகி முனிவருக்குக் கைவந்த கலையே என்பது தெளிவாம்.

இவ்வாறாக ஸ்ரீ ராமன் தோன்றிய அத் திரேதாயுகம் யுகசந்தியுள்பட 3648 ஆண்டுகளுக்குப்பின் கி.மு. 04.12.6749 திங்கள்கிழமை தமிழ் நந்தன ஆண்டு மகர தைத்திங்கள் கடைசி நாளுடன் முடிந்துள்ளதென்பதை அறியமுடிகின்றது.

## துவா பரயுக ஆரம்பம்

அதற்கடுத்த துவாபரயுகம் கி.மு. 05.12.6749 செவ்வாய்க்கிழமை தமிழ் நந்தன ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக பகுள தசமி திதியும் கேட்டை நட்சத்திரமும் கூடிய தினத்தில் ஆரம்பமாகியுள்ளது.

இந்த துவாபரயுகத்திற்குரிய அவதார புருஷர்கள் இருவராவார்கள். அவர்கள் யார் ? யார் ? என்பதை புராணங்களை ஆய்ந்து முடிவு செய்து கொள்ள வேண்டும்.

இத்துவாபர யுகத்தில் இன்றுள்ள மதுரையைத் தலைநகராகக் கொண்டு கீர்த்தி பூஷண பாண்டியன் முதல் கூன்பாண்டியன்வரை சுமார் 32 மன்னர்கள் ஆட்சிபுரிந்துள்ளார்கள்.

இவர்களில் அரிமர்த்தன பாண்டியன் காலத்தில் மாணிக்க வாசகரும், கூன்பாண்டியன் காலத்தில் திருஞான சம்பந்தரும், அப்பரும் வாழ்ந்துள்ளார்கள் என்பது உறுதியாகிறது.

இத் துவாபரயுகம் யுகசந்தியுள்பட 2432 ஆண்டுகளுக்குப்பின் கி.மு. 10.12.4317 வியாழக்கிழமை தமிழ் ரக்தாக்ஷி ஆண்டு மகர தைத் திங்கள் கடைசி நாளுடன் முடிந்துள்ளது.

## கலியுக ஆரம்பம்

வைவஸ்வதமனுவால் தொடங்கப்பட்ட 28வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுகம், உண்மையில் கி.மு. 20.12.4317 வெள்ளிக்கிழமை தமிழ் ரக்தாக்ஷி ஆண்டு கும்பமாசித் திங்கள் முதல் நாள் மாக பகுள சதுர்த்தி திதியும் உத்திர பல்குனி (உத்திரம்) நட்சத்திரமுங் கூடிய தினத்தில் தான் ஆரம்பமாகியுள்ளது.

அன்று அதிகாலை மணி 3.54க்கு சூரியன் கும்ப ராசியில் பிரவேசித்துள்ளார். அதாவது முதல் நாள் மாலை மணி 6 லிருந்து 9 மணி 54 நிமிடங்களுக்குப் பின் என்பதாம் (.4125 நாளுக்குப்பின்)

அப்போது சப்தரிஷிகள் மக நட்சத்திரத்தில் 67 ஆம் ஆண்டில் இருந்துள்ளார்கள். இதை விருத்த கர்க்கர் கூற்று உறுதிப்படுத்துகிறது.

## அழ்வார்கள் தோற்றம்

இந்த கலியுகத்தின் 114ஆம் ஆண்டில் திருமழிசையில், திருமழிசையாழ்வார் கி.மு. 16.12.4203 வியாழக்கிழமை தமிழ் காளயுக்தி ஆண்டு மகர தைத்திங்கள் 26ஆம் நாள் மாக பகுள பிரதமை திதியும் மகம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் முதல் ஆழ்வாராக அவதரித்துள்ளார்.

இவரை குருபரம்பரா ஏடுகள் தரும் குறிப்புகளின்படி, இன்று நாம் கொண்டுள்ள முதல் மூன்று ஆழ்வார்களுக்கு முன் பிறந்தவராகக் கொள்ள முடிகின்றது.

எனவே ஆழ்வார்கள் பன்னிருவரில், முதல் ஆழ்வார் திருமழிசையாழ்வாரே என்பது உறுதியாகிறது.

அவருக்குப் பின்னர் அக் கலியுகத்தின் 115ஆம் ஆண்டில் திருக்காஞ்சியில் பொய்கையாழ்வார் கி.மு. 30.08.4202 செவ்வாய்க்கிழமை தமிழ் சித்தார்த்தி ஆண்டு துலா ஐப்பசித் திங்கள் 7ஆம் நாள் அஸ்வினா சுக்ல அஷ்டமி திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

அதே கலியுகத்தின் 115 ஆம் ஆண்டிலேயே மாவலிபுரத்தில் பூதத்தாழ்வார் கி.மு. 31.08.4202 புதன்கிழமை தமிழ் சித்தார்த்தி



ஆண்டு துலா ஐப்பசித்திங்கள் 8ஆம் நாள் அஸ்வினா சுக்ல நவமி திதியும் அவிட்டம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

அதே கலியுகத்தின் 115ஆம் ஆண்டிலேயே திருமயிலையில், பேயாழ்வார் கி.மு. 01.09.4202 வியாழக்கிழமை தமிழ் சித்தார்த்தி ஆண்டு துலா ஐப்பசித் திங்கள் 9ஆம் நாள் அஸ்வினா சுக்ல தசமி திதியும் சதயம் நட்சத்திரமுங் கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

இதினின்று முதல் நான்கு ஆழ்வார்கள் ஏக காலத்தில் வாழ்ந்தவர்களாகின்றனர்.

இந்த கலியுகத்தின் ஆரம்பத்திலேயே பட்டினத்தடிகளும் தோன்றி வாழ்ந்துள்ளதாக அவரின் பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது.

இதே கலியுகத்தின் 1094ஆம் ஆண்டில் திருக்கோளூரில் மது ரகவி ஆழ்வார் கி.மு. 19.03.3223 வெள்ளிக்கிழமை தமிழ் பகுதான்ய ஆண்டு மேஷ சித்திரை 24ஆம் நாள் வைசாக சுக்ல சதுர்த்தசி திதியும் சித்திரை நட்சத்திமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார். மதுர கவி ஆழ்வாரையும் நம்மாழ்வாரையும் ஒன்றுபடுத்திப் பேசுவது பாட பேதமாகத் தெரிகிறது.

ஆக முதல் 5 ஆழ்வார்கள் காலத்தையே நாம் கி.மு. 4203 முதல் கி.மு. 3223 வரையுள்ள சுமார் 1000 ஆண்டுகள் கொண்ட காலமாகக் கொள்ள முடிகின்றது.

இதில் முதல் நான்கு ஆழ்வார்களுக்குப்பின் 980வது ஆண்டில்தான் 5வது ஆழ்வாரான மதுரகவியாழ்வார் அவதரித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த முதல் ஐந்து ஆழ்வார்களால் பாடப்பெற்ற நாலாயிரதிவ்ய பிரபந்த பாசுரங்களில் எங்கேயும் ஸ்ரீ கிருஷ்ணன் விளிக்கப்படவில்லை. அப்படி ஏதும் இருந்தால் அது இடைச்செருகலாகத்தான் இருக்க முடியும்.

இதினின்று இந்த ஐவரும் ஸ்ரீகிருஷ்ணனுக்கு முன் பிறந்தவர்களே என்பதை, இவர்களுக்குப் பின் தோன்றிய நம்மாழ்வாரின் பாசுரங்கள் மூலமாகவும் உறுதி செய்ய முடிகின்றது.

## ஸ்ரீ கிருஷ்ணன் ஜனனம்

இக்கலியுகத்தில் 1132ஆம் ஆண்டில் மதுராவில் ஸ்ரீ கிருஷ்ணன் கி.மு. 23.07.3185 புதன்கிழமை தமிழ் நள ஆண்டு சிம்ம ஆவணித் திங்கள் 24ஆம் நாள் பாத்ரபத பகுள அஷ்டமி திதியும் ரோகிணி நட்சத்திரமுங் கூடிய தினத்தில் இரவு 12 மணியளவில் ஜனனமாகியுள்ளார் என்பதை வியாசரின் மகாபாரதம் மூலமும் விஷ்ணுபுராணக் கூற்றின் மூலமாகவும் அறியமுடிகின்றது.

அப்போது சப்தரிஷிகள் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரத்தில் 69 ஆம் ஆண்டில் இருந்துள்ளார்கள்.

இதினின்று கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமையினின்று தொடங்கிய சப்தரிஷி சகாப்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் 12076 ஆம் ஆண்டிலும் கலியுகத்தில் 1132 ஆம் ஆண்டிலும் மாக சைக்கிள் ரீதியாக 76வது மாக சைக்கிளில் 76ஆம் ஆண்டிலும் பிறந்திருக்கும் போது அதை கலியுகம் பிறந்ததாக விஷ்ணுபுராணத்தில் தவறாகக் கூறப்பட்டுவிட்டது.

ஆக திரேதாயுகத்தில் தோன்றிய ஸ்ரீ ராமனுக்கும், கலியுகத்தில் தோன்றிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் இடைப்பட்ட காலம் சரியாக 7020 ஆண்டுகளாம் என்பது உறுதி.

மகாபாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுடன் இன்னுஞ்சிலர் வாயிலாக கலி ஏற்கனவே பிறந்துவிட்டதாகவுள்ள கூற்றையும், பாண்டவர்களுக்கு சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நளன்கூட அக்கலியுகக் கொடுமைகளில் சிக்கித் தவித்தமையையும் காணமுடிகின்றது.

பாகவதத்தில் ஒரிடத்தில் "ஸ்ரீ கிருஷ்ணன்" என்று பரமபதம் அடைந்தாரோ அன்றே கலி ஆரம்பமானதாக பழமைவாதிகள் கூறுகிறார்கள்" என்ற கூற்றைத்தான் காணமுடிகிறது.

பாகவதத்திலோ, வியாசர்தந்த மகாபாரதத்திலோ ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்தது துவாபரயுக இறுதி என்றோ, அவருக்குப்பின் கலியுகம் என்றோ எங்கேயும் திட்டவட்டமாகக் கூறப்படவில்லை.



எனவே எவ்வாறு ? ஸ்ரீ முருகன் 27வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகஅவதார புருஷரோ, அஃதே போன்று ஸ்ரீ கிருஷ்ணன் 28வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுக அவதார புருஷரே என்பது உறுதியாம்.

இன்றுள்ள புராணங்களின்படி நாம் ஸ்ரீ கிருஷ்ணனை கி.மு. 3101க்கு முன்னுள்ள கற்பனையான துவாபரயுக அவதார புருஷர் எனக்கொண்டால் அது நம் மகரிஷிகளால் வடித்துக் கொடுக்கப்பட்ட வேதகால வானியலுக்கும் வியாசர் தந்த மகாபாரதக் காவியத்திற்கும் பேரிழுக்காம் என்பது உறுதி.

எனவே ஸ்ரீ கிருஷ்ணன் கி.மு. 3101க்கு முன்னுள்ள கலியுக அவதார புருஷரே என்பதும், அவர் எக்காரணம் கொண்டும் கற்பனையான கி.மு. 3101க்கு முன்னுள்ள துவாபரயுக அவதார புருஷராகார் என்பதும் உறுதியாம்.

## யுதிஷ்டிரர் ராஜசூயா யாகம்

ஸ்ரீ கிருஷ்ணன் தனது 31ஆம் வயதில் கி.மு. 25.10.3155 செவ்வாய்க்கிழமை தமிழ் விய ஆண்டு விருச்சிக கார்த்திகைத் திங்கள் 27ஆம் நாள் கார்த்திகா அமாவாசை திதியும் கேட்டை பின் மூலம் நட்சத்திரமுங் கூடிய தினத்தில் யுதிஷ்டிரரின் ராஜசூயா யாகத்தைச் சிறப்புற நடத்தி அன்றே சிசுபாலன் வதத்தையும் முடித்துள்ளார்.

## பாண்டவர்கள் வனவாசம்

பாண்டவர்கள் ஐவரும் துரௌபதையுடன் தங்களின் 13 ஆண்டுகள் கொண்ட வனவாசத்தை கி.மு. 27.6.3152 வெள்ளிக்கிழமை தமிழ் விரோதி ஆண்டு கடக ஆடித்திங்கள் 30ஆம் நாள் சிராவண சுக்ல பிரதமை திதியினின்று தொடங்கி 160 சாந்திரமான மாதங்கள் கொண்ட 13 சாந்திரமான ஆண்டுகளை கி.மு. 2.6.3139 புதன்கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கடக ஆடித்திங்கள் 4ஆம் நாள் ஆஷாதா அமாவாசையுடன் முடித்துக்கொண்டுள்ளார்கள் என்பதாக அறிய முடிகின்றது.

சௌரமான ரீதியில் 13 ஆண்டுகள் முடியவில்லையென்றாலும் சாந்திரமான ரீதியில் முடிந்துள்ளதென்பது ஸ்ரீகிருஷ்ணன், பீஷ்மர் போன்றோர் வாதமாம்.

பாண்டவர்களின் வனவாசம் முடிந்த பின் மகாபாரதப் போர் தொடங்கும் வரை இடையில் உள்ள காலம் சரியாக ஐந்து சாந்திரமான மாதங்களேயாம்.

இந்த் ஐந்து மாதங்களில் நான்காவது மாதமான நிஜ அஸ்வினா மாதத்தில் கி.மு. 15.9.3139 புதன்கிழமையன்று சந்திரகிரகணமும், தொடர்ந்து கி.மு. 28.9.3139 செவ்வாய்க்கிழமையன்று சூரிய கிரகணமும் நிகழ, அப்போது தூமகேது என்ற வால் நட்சத்திரமும் அந்த ஆண்டில் மகாபாரதப் போருக்கு முன் ஆகாயத்தில் தென்பட்டுள்ளதாக அறியமுடிகின்றது.

## ஸ்ரீ கிருஷ்ணன் தூது

ஸ்ரீகிருஷ்ணன் தூதுவராக உபபலேவியா நகரைவிட்டு கி.மு. 10.10.3139 ஞாயிற்றுக்கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கார்த்திகைத் திங்கள் 12ஆம் நாள் கார்த்திகா சுக்ல துவாதசி திதியும் ரேவதி நட்சத்திமுங் கூடிய தினத்தில் காலை சைத்ர முகூர்த்தத்தில் அஸ்த்தினாபுரம் நோக்கிப் புறப்பட்டுள்ளார்,

அவர் இடையில் விருகஸ்தலா என்ற இடத்தில் இரவு தங்கி மறுநாள் கி.மு. 11.10.3139 திங்கள்கிழமை கார்த்திகைத் திங்கள் 13ஆம் நாள் மாலை திரயோதசி திதியும் பரணி நட்சத்திரமும் கூடிய தினத்தில் அஸ்த்தினாபுரத்தை அடைந்துள்ளார்.

அங்கு ஸ்ரீகிருஷ்ணன், விதுரர் முதலானோரை அணுகி போரைத் தவிர்க்க கி.மு. 17.10.3139 ஞாயிறு கிருஷ்ண பஞ்சமி திதியும் புஷ்ய நட்சத்திரமும் கூடிய தினம் வரை முயன்றும், துரியோதனன் எதற்கும் ஒத்துவராமையால் ஸ்ரீ கிருஷ்ணன் கி.மு. 21.10.3139 வியாழன் உத்திர பல்குனி நட்சத்திரத்தன்று அடுத்து வரவுள்ள ஏழாம் நாளான கார்த்திகா ஜ்யேஷ்ட அமாவாசை தினத்தன்று குருக்ஷேத்திரத்தில் போரைத் துவக்கிவிடலாமென்று கர்ணனிடம் இறுதியாகக் கூறிப் புறப்பட்டு கி.மு. 23.10.3139 சனிக்கிழமை சித்திரை நட்சத்திரத்தன்று உபபலேவியா நகரை அடைந்துள்ளோம்.



## மகாபாரதப்போர்

இந்த நிலையில் கி.மு. 27.10.3139 புதன்கிழமை கார்த்திகா போதாயன அமாவாசை யானபடியால் மறுநாள் கி.மு. 28.10.3139 வியாழன் கார்த்திகா அமாவாசை திதியும் கேட்டை பின் மூல நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அரவானை பலியிட்டு மறுநாள் கி.மு.29.10.3139 வெள்ளிக்கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு தனுசு மார்கழித் திங்கள் முதல் நாள் மார்கசீரா சுக்ல பிரதமை திதியும் மூலம் நட்சத்திரமுங்கூடிய அன்று காலை சூரிய உதயத்தின் போதே குருக்ஷேத்திரத்தில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையே மகாபாரதப் போர் தொடங்கியுள்ளதாக அறியமுடிகின்றது.

ஸ்ரீ கிருஷ்ணன் தனது 47 ஆம் வயதில் குருக்ஷேத்திரப் போரில் அர்ச்சுனனுக்குச் சாரதியாக நின்று போரைத் தொடங்கியுள்ளார்.

மகாபாரதப் போர் கி.மு. 15.11.3139 திங்கள் கிழமையுடன் 18 நாட்கள் தொடர்ந்து நடந்து முடிய மறுநாள் காலை துரியோதனன் மாள பாண்டவர்கள் வெற்றிவாகை சூடியுள்ளார்கள்.

## யுதிஷ்டிரா சகாவும் முடிசூட்டு விழாவும்

அதன்பின் பீஷ்மரின் பரிபூர்ண ஆசீர்வாதத்துடன் ஸ்ரீ கிருஷ்ணன், யுதிஷ்டிரருக்கு கி.மு. 27.12.3139 திங்கள் கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கும்பமாசி முதல் நாளன்று முடிசூட்டி அஸ்த்தினாபுரத்தின் ஆட்சிப் பொறுப்பை அவர் வசம் ஒப்படைத்துள்ளார் என்றாலும், அப்போதுள்ள வழக்கப்படி கி.மு. 27.12.3140 ஞாயிறு தமிழ் பிலவ ஆண்டு கும்பமாசி முதல் நாளினின்று கி.மு. 26.12.3139 ஞாயிறு தமிழ் சுபகிருது ஆண்டு மகர தை கடைசி நாளுடன் ஒராண்டாகக் கொள்ளும் நிலை இருந்ததால் மகாபாரதப் போர் அந்த ஆண்டின் இடையில் மார்கழித் திங்களில் நடந்து போரில் வெற்றி பெற்றாலும் அதையும் ஒர் வெற்றி பெற்ற ஆண்டாகக் கொண்டு யுதிஷ்டிரர் பேரால் ஒரு சகாவை அந்த ஆண்டின் ஆரம்ப நாளான மேலே கண்ட கி.மு. 27.12.3140 ஞாயிறு தமிழ் பிலவ ஆண்டு கும்பமாசி முதல் நாளினின்றே

கணக்கிட்டு, அது யுதிஷ்ட்ரா சகா என வழக்கில் இருந்துள்ளதென்பதை வரலாறு மற்றும் கல்வெட்டுக் குறிப்புகளின் மூலமாக அறிய முடிகின்றது.

இதினின்று யுதிஷ்ட்ரா சகாவுக்கும் யுதிஷ்டிரர் முடிசூட்டு விழாவுக்கும் இடைப்பட்ட காலம் சரியாக ஒரு ஆண்டாம் என்பது உறுதியாகிறது.

### பீஷ்மாஷ்டமி

இவ்வாறு யுதிஷ்டிரர் முடிசூட்டு விழா நடந்துமுடிந்த பின் கி.மு. 2.1.3138 ஞாயிறு தமிழ் சுபகிருது ஆண்டு கும்பமாசி 7ஆம் நாள் அப்போது தக்ஷிணாயணத்தின் இறுதி நாளான ரத சப்தமியான படியால் அதற்கு மறுநாள் கி.மு. 3.1.3138 திங்கள்கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கும்பமாசி 8ஆம் நாள் மாசுசுக்ல அஷ்டமிதிதியும் கார்த்திகை பின் ரோகிணி நட்சத்திரமும் கூடிய உத்திராயண புண்ணியகால தொடக்கத்தில் மதியம் பிதாமகர் பீஷ்மர் மோட்சமடைய, அன்னாரின் நல்லடக்கத்தை ஸ்ரீகிருஷ்ணன் முடித்துவிட்டு துவாரகைக்குச் சென்று சுமார் 32 ஆண்டுகள் ஆட்சிபுரிந்துள்ளார் என்பதை வியாசரின் மகாபாரதம் தெளிவுபடுத்துகிறது.

பிதாமகர் பீஷ்மர் உத்திராயண ஆரம்ப காலத்திற்காக கி.மு. 7.11.3139 ஞாயிறு முதல் கி.மு. 3.1.3138 திங்கள் வரை 58 நாட்கள் உயிரோடு அம்புப் படுக்கையில் இருந்து வந்துள்ளார் என்ற வியாசரின் கூற்று ஒன்றே, இற்றைக்கு 5136 ஆண்டுகளுக்கு முன்பே பிதாமகர் பீஷ்மருக்கு வானியல் கலை முற்றும் தெரிந்ததென்பதற்குச் சான்றாம்.

அஸ்த்தினாபுரத்தில் யுதிஷ்டிரர் சுமார் 36 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து கடைசியாக இமாலயத்தை நோக்கி தனது இறுதிப் பயணத்தை மேற்கொண்டதாக மகாபாரதம் பேசுகிறது.

### கோள்கள் ரீதியாய் கலியுகம் முடிவு

குருக்ஷேத்திரத்தில் மகாபாரதப் போர் நடந்து முடிந்து சுமார் 34 ஆண்டுகள் ஓடிவிட்ட நிலையில், 12160 ஆண்டுகளுக்கு முன் கி.மு. 26.9.15265 வியாழன் தமிழ் துர்முகி ஆண்டுகள் மகர



தைத்திங்கள் 14ஆம் நாள் ஓர் பௌஷ அமாவாசையன்று அனைத்து கோள்களும் 300 டிகிரிக்கு இரு மருங்கிலும் 120 டிகிரிகளுக்குள் கூடியிருந்த நிலைக்கு மீண்டும் கி.மு. 11.12.3105 சனிக்கிழமை தமிழ் தாது ஆண்டு மகர தைத்திங்கள் 14ஆம் நாள் பௌஷ அமாவாசையன்று வந்துவிட அன்றோடு 28வது மகாயுகம் கோள்கள் ரீதியாக கலியுகமாக முடிந்துள்ளதென்பதை ஆய்வில் அறியமுடிகின்றது.

### கோள்கள் ரீதியாக கிருதயுகம் ஆரம்பம்

அதற்கு மறுநாள் கி.மு. 12.12.3105 ஞாயிறு தமிழ் தாது ஆண்டு மகர தைத்திங்கள் 15ஆம் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று அடுத்த 29வது நடப்பு மகா யுகம் கோள்கள் ரீதியாக கிருதயுகமாக ஆரம்பமாகியுள்ளது.

ஆனால் அந்த கி.மு.12.12.3105 ஞாயிறு முதல் 50 சாந்திரமான மாதங்கள் முடிவுறும் கி.மு. 27.12.3101 சனிக்கிழமை தமிழ் விக்ரம ஆண்டு மகர தைத்திங்கள் கடைசிநாள் ஓர் பௌஷ அமாவாசை வரை முந்திய 28வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுகம் வேதாங்க சோதிஷாப்படி இருந்துள்ளது.

இதினின்று இந்த 50 சாந்திரமான மாதங்களும் வேதாங்க சோதிஷாப்படி 28வது மகாயுகத்தின் கடைசி யுகமான கலியுகத்தின் சேஷமானாலும் அது கோள்கள் ரீதியாக அடுத்த 29வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகத்தின் ஆரம்பகட்டமே என்பது தெளிவாம்.

### ஸ்ரீ கிருஷ்ணன் பரமபதம்

இந்த நிலையில் ஆங்காங்கே மக்களிடையே வன்முறைகள் உச்சம் பெற்று தலைவிரித்தாடி, கலியின் இறுதித் தோற்றம் வெளிப்படலாயிற்று.

அப்போதுதான் ஸ்ரீ கிருஷ்ணன் விரக்தியுற்றவராக கடற்கரை நந்தவனத்தில் தன்னை மறந்து உறங்கும்போது வேடனொருவனின் அம்பிற்கு இலக்காகி கி.மு. 6.2.3101 வியாழன் தமிழ் பிரமாதி

ஆண்டு மீன பங்குனி 12ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியும் உத்திர புரோஷ்டபாடா (உத்திரட்டாதி) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் பரமபதம் அடைந்துள்ளார்.

## ஜெய பாரத யுதிஷ்ட்ரா சகா

ஸ்ரீ கிருஷ்ணனின் ஞாபகார்த்தமாக அவர் பரமபதம் அடைந்த அந்த கி.மு. 6.2.3101 வியாழன் தமிழ் பிரமாதி ஆண்டு மீன பங்குனி 12ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியை ஆரம்பமாகக் கொண்டு சாந்திரமான ரீதியில் ஒரு சகா தோற்றுவிக்கப்பட்டு அந்த சகா ஜெய பாரத யுதிஷ்ட்ரா சகா என வரலாற்றில் இடம் பெற்றுள்ளதை நாம் காணமுடிகிறது.

## கலியுக அவதார புருஷன் ஸ்ரீ கிருஷ்ணனே

என்னால் மேலே கூறப்பட்ட கி.மு. 12.12.3105 ஞாயிறு மாக சுக்ல பிரதமை திதியினின்று 39 சாந்திரமான மாதங்கள் முடிந்து 40வது மாதத்தின் ஆரம்ப நாளான கி.மு. 6.2.3101 வியாழன் ஒரு சைத்ர சுக்ல பிரதமை திதியன்று ஸ்ரீ கிருஷ்ணன் பரமபதம் அடைய அதினின்று கி.மு. 27.12.3101 சனிக்கிழமை வரை 11 சாந்திரமான மாதங்களும் வேதாங்க சோதிஷாப்படி கலியுகமே என்பது உறுதி.

இதினின்று ஸ்ரீ கிருஷ்ணனின் இறுதி நாள் வேதாங்க சோதிஷாப்படி கலியுகமானாலும் அது கோள்கள் ரீதியாக 29வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகமே என்ற கருத்தை, வியாசர் மகாபாரதம் மௌஸலபர்வம் முதல் அத்தியாத்தில் தெளிவுபடுத்தியுள்ளார்.

உண்மையில் ஸ்ரீ கிருஷ்ணன் துவாபரயுக இறுதியில் பரமபதம் அடைந்துள்ளார் என்றால், அவருக்குப்பின் கலியுகம் முடிந்து அதன் பின் எவ்வளவோ ஆண்டுகளுக்குப்பின் வரவுள்ள கிருதயுகத்தை மேலே கண்டவாறு வியாசர் குறிப்பிட்டிருக்க வழியே இல்லை.

எனவே ஸ்ரீ கிருஷ்ணன் கி.மு. 20.12.4317 வெள்ளிக்கிழமையினின்று தொடங்கி யுகசந்தியுள்பட 1216 ஆண்டுகளுக்குப் பின் கி.மு. 27.12.3101 சனிக்கிழமை தமிழ்



விக்ரம ஆண்டு மகர தைத்திங்கள் கடைசிநாள் ஒரு பௌஷ அமாவாசையுடன் வேதாங்க சோதிஷாப்படி முடிந்துள்ள கலியுக அவதார புருஷரே என்பது திண்ணம்.

## நம்மாழ்வார் ஜனனம்

ஸ்ரீகிருஷ்ணன் பரமபதம் அடைந்த அந்த கி.மு. 6.2.3101 வியாழன் சைத்ர சுக்ல பிரதமை திதியினின்று 43 நாட்களுக்குப்பின் நம்மாழ்வார் கி.மு. 21.3.3101 வெள்ளிக்கிழமை தமிழ் விக்ரம ஆண்டு மேஷ சித்திரை 25ஆம் நாள் வைசாக பௌர்ணமி திதியும் விசாகம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அக்கலியுக கடைசி ஆண்டான 1216ன் ஆரம்பத்திலேயே அதாவது 3வது மாதத்திலேயே திருக்குருகூரில் காரியென்பவருக்குப் புத்திரராய் அவதரித்துள்ளார்.

இதினின்று அக் கலியுகத்திலேயே ஸ்ரீ கிருஷ்ணனுக்கு முன் ஐந்து ஆழ்வார்களும் அவருக்குப்பின் ஒரு ஆழ்வாரும், தோன்றியுள்ளதால் ஆக மொத்தம் ஆறு ஆழ்வார்களும் 28வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகத் தோன்றல்களே என்பது உறுதியாம்.

## கலியுகம் முடிவு

இவ்வாறாக கி.மு. 20.12.4317 வெள்ளிக்கிழமையினின்று ஆரம்பமான கலியுகம் யுகசந்தியுள்பட 1216 ஆண்டுகளுக்குப்பின் கி.மு. 27.12.3101 சனிக்கிழமையுடன் முடிந்துள்ளதென்பது உறுதியாம்.

ஸ்ரீ முருகன் தோன்றிய கலியுகம் கி.மு. 16477ல் ஆரம்பமாக, அது முதல் ஸ்ரீ கிருஷ்ணன் தோன்றிய கலியுகம் முடிவுறும் கி.மு. 3101க்கு முன்னால், சுமார் 13400 ஆண்டுகள் கொண்ட உன்னத வரலாற்றை நாம் அறிந்துள்ளோம் என்பது தெளிவாகிறது.

## நடப்பு 29வது மகாயுகத் தோற்றம்

## கிருதயுகம் ஆரம்பம்

நடப்பு 29வது மகாயுகம் கோள்கள் ரீதியாக கி.மு. 12.12.3105 ஞாயிறு தமிழ் தாது ஆண்டு மகர தைத் திங்கள் 15ஆம் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று ஆரம்பமானாலும், அதே 29வது மகாயுகம் 50 சாந்திரமான மாதங்களுக்குப் பின்னர்தான் வேதாங்க சோதிஷாப்படி கிருதயுகமாக கி.மு. 28.12.3101 ஞாயிறு தமிழ் விக்ரம ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் வசந்த முதலில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கியுள்ளது.

அப்போது சப்தரிஷிகள் திரவோணம் நட்சத்திரத்தில் 66ஆம் ஆண்டில் இருந்துள்ளார்கள்.

இந்த கிருதயுகம் பரீக்ஷித் மன்னனால் தொடங்கப்பட்டு அதன்பின் ஜெனமேஜெயன் முதலானோர் ஆட்சிபுரிய, பாண்டவர்கள் ஆட்சி சுமார் 500 ஆண்டுகள் நடந்துள்ளதாக அறியமுடிகின்றது.

இந்த கிருதயுகத்தின் 27ஆம் ஆண்டில் திருவஞ்சைக்களம் என்னும் கொல்லி நகரத்தில் குலசேகர ஆழ்வார் கி.மு. 18.1.3074 வெள்ளிக்கிழமை தமிழ் பராபவ ஆண்டு கும்பமாசி 23ஆம் நாள் பல்குன சுக்ல துவாதசி திதியும் புனர்பூசம் நட்சத்திரமும் கூடிய பிரீதி என்னும் யோகத்தில் அவதரித்துள்ளார்.

## நம்மாழ்வார் முக்தி

முந்திய கலியுகத்தில் கி.மு. 21.3.3101 வெள்ளிக்கிழமையன்று தோன்றிய நம்மாழ்வார் இப்பூவுலகில் 35 திருநட்சத்திரங்கள் வரை இருந்து கி.மு. 30.11.3067 திங்கள்கிழமை தமிழ் ஆனந்த ஆண்டு மகர தைத்திங்கள் 3ஆம் நாள் பௌஷ பகுள பஞ்சமி திதியும் பூரம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் கிருதயுகத்தின் 34ஆம் ஆண்டின் இறுதியில் முக்தியடைந்துள்ளார். ஆக 28,29 ஆகிய இரு மகாயுகங்களில் வாழ்ந்த பெருமை நம்மாழ்வாருக்குக் கிடைத்துள்ளது.

இந்த கிருதயுகத்தின் 46ஆம் ஆண்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில், பெரியாழ்வார் கி.மு. 16.5.3055 ஞாயிற்றுக்கிழமை தமிழ் அக்ஷய ஆண்டு மிதுன ஆனித்திங்கள் 18ஆம் நாள் ஆஷாதா சுக்ல ஏகாதசி திதியும் சுவாதி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் ஒரு புரச்சூட வைஷ்ணவருக்குப் புத்திரராய் அவதரித்துள்ளார்.

## ஜெனமேஜெயன் செப்பேடு

அருச்சுனனின் பேரனான ஜெனமேஜெயனால் ஸ்ரீ சீதாராமன் கோவில்களுக்கு துங்கபத்திரா நதிக்கரையில் ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 89க்குரிய தமிழ் பிலவங்க ஆண்டுக்குச் சம்பந்தப்பட்ட கி.மு. 3013ல், நிலம் வழங்கியதற்கான செப்பேடு ஒன்றுள்ளது.



இதே கிருதயுகத்தின் 96ஆம் ஆண்டில் ஸ்ரீ ஆண்டாள் ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வாருக்குத் திருமகளாக கி.மு. 23.06.3005 செவ்வாய்க்கிழமை தமிழ் நள ஆண்டு கடக ஆடித்திங்கள் 24ஆம் நாள் சிராவணசுக்ல திருதியை பின் சதுர்த்தி திதியும் கூடிய நன்னாளில் பூரம் நட்சத்திரத்தில் அவதிரித்துள்ளார்.

இக்கிருதயுகத்தின் 288ஆம் ஆண்டில் திருமண்டங்குடியில் தொண்டரடிப்பொடியாழ்வார் கி.மு. 22.11.2813 செவ்வாய்க்கிழமை தமிழ் விபவ ஆண்டு தனுசு மார்கழித் திங்கள் 22ஆம் நாள் மார்கசீரா பகுள சதுர்த்தசி திதியும் கேட்டை நட்சத்திரமுங்கூடிய தினத்தில், ஒரு புரச்சூட வைஷ்ணவருக்குப் புத்திரராய் அவதரித்துள்ளார்.

## பூம்புகாரில் இந்திரவிழா

எனது கணிப்பில் ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 305ல் கி.மு.19.2.2797 வெள்ளிக்கிழமைக்குச் சரியான தமிழ் சுபானு ஆண்டு மீன பங்குனி 23ஆம் நாள் சித்திரா பவுர்ணமி திதியும் சித்திரை நட்சத்திரமுங் கூடிய தினத்தில் பூம்புகார் நகரில் நடந்த இந்திர விழாவில் மாதவியை விட்டுப் பிரிந்த கோவலன், கண்ணகியுடன் காவிரிநதியின் வடகரையோரமாகவே மதுரை நகரை நோக்கிச் சென்றுள்ளதாக அறிய முடிகின்றது.

## மதுரைநகரை தீயுண்டநாள்

கோவலன் கொலையுண்ட செய்தி கேட்ட கண்ணகி பாண்டியன் நெடுஞ்செழியனிடம் வழக்குரைத்தபின் அவளின் சாபத்தால் கி.மு. 25.6.2797 வெள்ளிக்கிழமை தமிழ் தாரண ஆண்டு கடக ஆடித்திங்கள் 25ஆம் நாளன்று சிராவண பகுள அஷ்டமி திதியும் கார்த்திகை நட்சத்திரமுங்கூடிய போழ்தில் ஆரம்பமான தீயால் மதுரை நகர் அழிய அன்று மாலை வைகைக்கரை ஓரமாகவே மேற்கு நோக்கிச் சென்ற கண்ணகி சேரநாட்டை அடைந்துள்ளதாக அறிய முடிகின்றது.

இக்கிருதயுகத்தின் 341ஆம் ஆண்டில் நிகுளாபுரி என்ற உறையூரில் திருப்பாணாழ்வார் கி.மு. 24.09.2760 புதன்கிழமை தமிழ் துன்மதி ஆண்டு துலா ஐப்பசித் திங்கள் 23ஆம் நாள் கார்த்திகா பகுள துவிதியை திதியும் ரோகிணி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

இதே கிருதயுகத்தின் 397ஆம் ஆண்டில் திருவாலி திருநகரத்தில் திருமங்கையாழ்வார் கி.மு. 04.10.2704 சனிக்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு விருச்சிக கார்த்திகை 3ஆம் நாள் கார்த்திகா பௌர்ணமி திதியும் கார்த்திகை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் நீலனென்னும் சேநாபதிக்குப் புத்திரராய் அவதரித்துள்ளார்.

இதனின்று கடைசி 6 ஆழ்வார்களும் 29வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகத்தின் தோன்றல்களே என்பது தெளிவாம்.

இதினின்று கி.மு. 2600க்கு முன் வாழ்ந்தவர்களை நம் வரலாற்றுப் பேராசிரியர்கள் கி.பி. 600க்குக் கீழே காண விழைந்தது வியப்பிற்கும் வேதனைக்கும் உரியதே என்றால் அது மிகையாகாது.

ஆக ஆழ்வார்கள் பன்னிருவரும் கி.மு. 4203 முதல் கி.மு. 2704 வரையுள்ள சுமார் 1500 ஆண்டுகள் கொண்ட வரலாற்றைப் பெற்றுள்ளவர்களாக நாம் அறிய முடிகின்றது.

இன்று ஸ்ரீரங்கத்தின் வடபுறம் கிழக்காக ஓடும் கொள்ளிடம் நதிதான் அக்காலத்தில் பொன்னி நதியாம் என்பதை ஆழ்வார்கள் அருளிய பாசுரங்கள் வாயிலாகவும், கல்வெட்டுக் குறிப்புகள் மூலமாகவும் அறியமுடிகின்றது.

இன்றுள்ள காவிரி கி.மு. 2600க்குப் பின்னர் அப்பொன்னி நதியாம் இன்றுள்ள கொள்ளிடத்தினின்று கரிகாற் சோழன் காலத்தில் பிரிக்கப்பட்டு, பின் கல்லணையினின்று பல பிரிவுகளாகி ஆங்காங்கே கரைபோட்டு பாசனத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளதாக அறிய முடிகின்றது.

ஒரு காலத்தில் சங்க இலக்கியங்களில் காணப்படும் சமணம், சாக்கியம் கி.மு. 2500க்குப் பின் ஜைனம், பௌத்தம் என மாறியுள்ளதாக அறியப்படுகின்றது.

கி.மு. 2600லிருந்து கி.மு. 500 வரையுள்ள சுமார் இரண்டாயிரம் ஆண்டுகள் நம் பாரதேசத்து வரலாற்றில் சோதனைக்குரிய காலமாகவுள்ளது.

ஆங்காங்கே வெள்ளம், புயல், பூகம்பம், வெப்பம், குளிர் போன்ற இயற்கைச் சீற்றங்கள் நிகழ வறுமை, பசி, பட்டினி போன்ற நிலைகள் பரவி, பேரரசுகள் மறைந்து குறுநில மன்னர்களின் ஆட்சி நடந்துள்ளதாக அறிய முடிகின்றது.

இந்த நிலையில் 24வது தீர்த்தங்கரரான மகாவீரர் தோன்றி ஜைன மதத்தை பாரதம் எங்கும் பரப்பியுள்ளார்.

## கௌதம புத்தர் ஜனனம்

அதன்பின் பௌத்தமத ஸ்தாபகர்களில் 27 நபர்களுக்குப்பின்னர் தான் சுத்தோதனருக்கும் மாயைக்கும் புத்திரராக கபிலவாஸ்து நகரில் கௌதமபுத்தர் கி.மு. 9.4.544 திங்கள்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு மேஷ



சித்திரை 28ஆம் நாள் வைசாக பௌர்ணமி திதியும் சுவாதி பின் விசாகம் நட்சத்திரமுங் கூடிய சுபதினத்தில் தோன்றி பௌத்த மதத்தைப் பரப்ப இவ்விரு மதங்களால் இந்துமதம் க்ஷீணதிசை அடைந்து மக்கள் மத்தியில் அது செல்வாக்கற்ற நிலைய கி.மு. 500 வரைத் தழுவியுள்ளதாக அறியமுடிகின்றது.

## கௌதமபுத்தர் மறைவு

இவர் கி.மு. 11.10.483 புதன்கிழமை தமிழ் காளயுக்தி ஆண்டு துலா ஐப்பசித்திங்கள் 26ஆம் நாள் கார்த்திகா •சுக்ல அஷ்டமி திதியும் திருவோணம் நட்சத்திரமுங் கூடிய தினத்தில் தனது 62ஆம் வயதில் நிர்வாணமடைந்துள்ளார்.

இந்திய தேசத்தில் பௌத்த மதம் பொலிவுற்று அண்டை நாடுகளிலும் வேரூன்றிவிட்ட நிலையில் ஆங்காங்கே மதக்கலவரங்கள் தோன்ற வேதபுராண இதிகாசங்கள் யாவும் மக்கள் மத்தியில் மறையத் தொடங்கியுள்ளன. அத்துடன் அன்னிய தேசத்தவர்கள் வியாபார நிமித்தமாகவும், நம் பாரத தேசத்துக் கலாச்சாரத்தை கற்றுச் செல்லவும் தொடர்ந்து வந்துள்ளதாக அறியமுடிகின்றது.

## ஆதி சங்கரர் ஜனனம்

இவ்வாறாக நம் பாரத தேசத்தில் இந்து மதம் அறவே மறைந்து வேத புராணங்களும் உபநிஷத்துகளும் கை நழுவிய நிலையில்தான், கேரள மாநிலத்தில் காலடி என்ற குக்கிராமத்தில் அந்தணர் குலத்தில் நம் ஆதிசங்கரர் யுதிஷ்ட்ரா சகா 2631க்கும் ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2593க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 02.04.509 செவ்வாய்க்கிழமை தமிழ் நந்தன ஆண்டு மேஷ சித்திரை 20ஆம் நாள் வைசாக சுக்ல பஞ்சமி திதியும் ஆருத்ரா(திருவாதிரை) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் கடக லக்னத்தில் மத்தியம் மணி 12.30க்குள் அவதரித்துள்ளார்.

அவர் தனது 32 வயதிற்குள் ஆற்றவொண்ணா ஆன்மீகப் பணிகள் பலவற்றை ஆற்றி, பாரதம் முழுவதும் சென்று, ஆங்காங்கே மட பீடங்களை நிறுவ வழி வகுத்து, ஜைன பௌத்த மதங்களை பொலிவிழக்கச் செய்து இந்து மதத்தை மீண்டும் பாரதம் எங்கும் பரப்ப வழி வகுக்கவில்லையேல், இன்று நாம் காணும் கோகுலாஷ்டமி, ஸ்ரீ ராமநவமி, வைகுண்ட ஏகாதசி, சிவன் ராத்திரி போன்ற இந்து பண்டிகைகளை காண்பது துர்லபம்.

அவர் யுதிஷ்ட்ரா சகா 2642ல் கி.மு. 28.01.498 திங்கட்கிழமை தமிழ் சுபகிருது ஆண்டு கும்பமாசி 17ஆம் நாள் பல்குன சுக்ல துவிதியை திதியும் உத்திரட்டாதி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் துங்கபத்திரா நதிக்கரையில் [illegible]ராந்தாவில் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதாள் அவர்களால் அபிஷேகம் செய்யப்பட்டு பீடத்தமர்ந்துள்ளார்.

## தோற்றுவித்த மடபீடங்கள்

**1. துவாரகா சாரதா பீடம்**

இது பிர்ம்ம ஸ்வரூபாச்சாரியார் அவர்களால் யுதிஷ்ட்ராசகா 2650க்கும், ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2611க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 12.01.490 புதன்கிழமை தமிழ் சாதாரண ஆண்டு கும்பமாசித் திங்கள் 2ஆம் நாள் மாக பூர்ணிமா திதியன்று தோற்றுவிக்கப்பட்டது.

**2. பத்ரிகாசிரமம் ஜோதிர்மடம்**

இது ஆனந்தகிரி தோதகாச்சாரியார் அவர்களால் யுதிஷ்ட்ரா சகா 2654க்கும், ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2616க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 19.12.486 வெள்ளிக்கிழமை தமிழ் ராக்ஷஸ ஆண்டு மகர தைத்திங்கள் 6ஆம் நாள் பௌஷ பூர்ணிமா திதியும் புனர்பூசம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.

**3. ஜெகன்னாதபுரி கோவர்த்தன மடம்**

இது பத்ம பாதாச்சாரியார் அவர்களால் யுதிஷ்ட்ரா சகா 2655க்கும் ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2617க்கும், சம்பந்தப்பட்ட கி.மு. 12.04.485 ஞாயிற்றுக்கிழமை தமிழ் நள ஆண்டு மேஷ சித்திரை 30ஆம் நாள் வைசாக சுக்ல தசமி திதியும் பூரம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.

**4. சிருங்கேரி சாரதா மடம்**

இது உறஸ்தமலாகாச்சாரியா அவர்களால் யுதிஷ்ட்ரா சகா 2656க்கும் ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2618க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 27.12.484 செவ்வாய்க்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு மகர தைத்திங்கள் 14ஆம் நாள் பௌஷ பூர்ணிமா திதியும் பூசம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.

**5. காஞ்சி காமகோடி பீடம்**

இது ஆதிசங்கரர் அவர்களால் யுதிஷ்ட்ரா சகா 2658க்கும், ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா 2620க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 13.04.482 வெள்ளிக்கிழமை தமிழ் சித்தார்த்தி ஆண்டு ரிஷப வைகாசித் திங்கள் முதல் நாள் வைசாக பூர்ணிமா திதியும் விசாகம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.



## ஆதி சங்கரர் முக்தி

இவ்வாறாக 5 மட பீடங்களை நிறுவ வழிவகுத்து, இந்து மதத்திற்குப் புத்துயிரூட்டி பொலிவு பெறச் செய்துவிட்டு தனது 33ஆம் வயதின் ஆரம்பத்தில் யுதிஷ்ட்டிரா சகா 2663க்கும் ஜெயபாரத யுதிஷ்டிரா சகா 2625க்கும் சம்பந்தப்பட்ட கி.மு. 14.04.477 வெள்ளிக்கிழமை தமிழ் ரக்தாக்ஷி ஆண்டு ரிஷப வைகாசித்திங்கள் முதல் நாள் வைசாக சுக்ல ஏகாதசி திதியும் உத்திர பல்குனி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் முக்தியடைந்துள்ளார்

## உறிசே போர்லா கல்வெட்டு

மகாராஷ்ட்ராவில் வத்ஸகுல்மா உறிசே போர்லா கல்வெட்டில் வரலாற்றுச் சிறப்புமிக்க வானியல் ரீதியான கல்வெட்டுக் குறிப்பில் யுதிஷ்ட்ரா சகா 3020ல் சப்தரிஷிகள் உத்திர பல்குனி (உத்திரம்) நட்சத்திரத்தில் பிரவேசித்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

எனது கணிப்பில் யுதிஷ்ட்ரா சகா கி.மு. 27.12.3140 ஞாயிறு தமிழ் பிலவ ஆண்டு கும்பமாசி முதல் நாளினின்று தொடங்கப்பட்டுள்ளதாக உள்ளதால் அதன்படி யுதிஷ்ட்ரா சகா 3020ஆம் ஆண்டு கி.மு. 15.01.120 வெள்ளிக்கிழமை முதல் கி.மு. 13.01.119 வெள்ளிக்கிழமை முடியவுள்ள ஒரு ஆண்டைக் குறிப்பதாகிறது.

எனவே சப்தரிஷிகள் கி.மு. 120ல் உறஸ்த்தம் நட்சத்திரத்தில் [illegible] முதல் ஆண்டினின்று விடுபட்டு, பின்நோக்கி நகர்ந்து கி.மு. 119ல் உத்திர பல்குனி நட்சத்திரத்தில் 81ஆம் ஆண்டை எய்துவதாக அறியமுடிகின்றது.

இதைத்தான் உறிசே போர்லா கல்வெட்டுக் குறிப்பில் காணமுடிகின்றது.

## விக்ரம சகா

இந்த சகா விக்ரமாதித்தன் என்ற பேரரசன் ஆட்சிபுரிந்தபோது கி.மு. [illegible].57 ஞாயிறு தமிழ் ருத்ரோத்காரி ஆண்டு மீன பங்குனி 27ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியும் அசுவதி நட்சத்திரமுங்கூடிய தினத்தை ஆரம்பமாகக் கொண்டு ஆரம்பமாகக் கொண்டு சாந்திரமான ரீதியில் கணக்கிடப்பட்டு இன்றும் விக்ரம சகா என வழக்கில் இருந்து வருகிறது. அந்தந்த ஆண்டை பல்குனி அமாவாசையுடன் முடித்துக் கணக்கிடப்பட்டு வருகிறது.

## இயேசு நாதர் ஜனனம்

எனது கணிப்பில் இயேசுநாதர் கி.மு. 24.12.4 வியாழக்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு மகர தைத்திங்கள் 8ஆம் நாள் பௌஷ சுக்ல தசமி திதியும் கார்த்திகை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் இரவு மணி 12க்கு ஜெரூசலேம் (பெத்லஹாம்) நகரில் அவதரித்துள்ளதாக அறியமுடிகின்றது.

இதற்கு அப்போது தூமகேது என்ற ஹாலே வால் நட்சத்திரம் கீழ்வானில் தோன்றியதாக அன்னாரால் அருளப்பட்ட பைபிள் கூற்றே சான்றாம்.

இந்த தூ மகேது என்ற வால் நட்சத்திரம், சுமார் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த வால்மீகிக்கும், சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த வியாசருக்கும் தெரிந்த ஒன்றுதான் என்பதை நாம் நினைவில் நிலை நிறுத்திக்கொள்ள வேண்டும்.

இதை கி.பி. ஆண்டுகளில் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹாலே என்ற விஞ்ஞானி கண்டுபிடித்ததாகக் கருதி, அவர் பேரால் அதற்கு ஹாலே வால் நட்சத்திரம் என்ற முத்திரை குத்தப்பட்டுள்ளது.

ஆங்கில நாள் நியதிப்படி, நாம் இயேசுநாதரின் ஜனனத்தை கி.மு. 25.12.4 வெள்ளிக்கிழமையினின்று தொடங்க வேண்டியுள்ளது.

அத் தேதியினின்று கீழ்நோக்கிக் கணக்கிடும் போது 1102வது நாள்தான் கி.மு. 31.12.1 ஞாயிறாம்.

அந்த கி.மு. 31.12.1 ஞாயிறு, தமிழ் ரௌத்ரி ஆண்டு மகர தைத்திங்கள் 15ஆம் நாள் பௌஷ பகுள சதுர்த்தி திதியும் பூர்வ பல்குனி (பூரம்) நட்சத்திரமுங்கூடிய தினமாம் என்பதால், அத் தேதியினின்றுதான் நாம் கிறிஸ்த்து பிறப்பிற்கு முன் என மேல் நோக்கி காலத்தைக் கணக்கிடுவதாகவுள்ளோம்.



## கிறிஸ்த்து சகாப்தத் தொடக்கம்

அஃதே போன்று அதற்கு மறுநாளை, கிறிஸ்த்து பிறப்பிற்குப் பின் என காலத்தை கீழ் நோக்கி கி.பி. 01.01.01 திங்கள்கிழமை தமிழ் ரௌத்ரி ஆண்டு மகர தைத்திங்கள் 16ஆம் நாள் பௌஷ பகுள பஞ்சமி திதியும் உத்திர பல்குனி (உத்திரம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று தொடங்குவதாகவுள்ளோம்.

இதினின்று கி.மு. – கி.பி. ஆண்டுகளின் சந்திப்பின்போது சப்தரிஷிகள் பூர்வ பல்குனி (பூரம்) நட்சத்திரத்தில் 43ஆம் ஆண்டில் இருப்பதாகக் கொள்ள முடிகின்றது.

வரலாறு தரும் முதல் மனித குலத் தோன்றலான வைவஸ்வதமனுவால் தோற்றுவிக்கப்பட்ட 28வது மகாயுகத்தின் முதல் யுகமான கிருதயுகம் கோள்கள் ரீதியாக கி.மு. 27.09.15265 வெள்ளிக்கிழமை தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 15ஆம் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று ஆரம்பமாக, அத்தேதியினின்று சரியாக 5575272 நாட்கள் கொண்ட 15264 ஆண்டுகள் கி.மு. 31.12.1 ஞாயிறுடன் முடிந்துவிட, அதற்கு அடுத்த 15265 ஆம் ஆண்டின் தொடக்கந்தான் கி.பி. 1.1.1 திங்கட்கிழமையினின்று ஆரம்பமாகும் கிறிஸ்த்து சகாப்தத் தொடக்கமே என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. 15265+2000 = 17265 is it ... historical pa...

நம் பாரத தேசத்துப் புராதன வரலாறு உலகிலேயே முதன்மையான ஒன்றென்பதற்கு இது ஒன்றே தக்க சான்றாம்.

நம் இந்திய தேசத்து வரலாற்றை, தெரிந்தோ அல்லது தெரியாமலோ சிறுமைப்படுத்த வேண்டுமென்று, மேல்நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்களால் எழுதப்பட்டதை நாம் உண்மையென நம்பியதும், அதற்காக அனைத்து புராதன வரலாற்றையும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டினின்று கீழே காண நாம் எடுத்துக்கொண்ட முயற்சியும் வியர்த்தமே என்பது தெளிவாம்.

இந்த கற்பனையான இந்திய தேச வரலாற்றை உண்மையெனக் கொண்டு சங்க இலக்கியங்களில் 179 மன்னர்களின் ஆட்சியில் சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு மேல் மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்ததென்ற கூற்றை உதாசீனப்படுத்திவிட்டு, நம் தமிழ்ச்

சான்றோர்களால் கற்பனையாக கி.மு. 32லிருந்து கணக்கிடப்பட்ட வள்ளுவர் ஆண்டால் தமிழகத்தின் தொன்மைச் சிறப்பு பாழ்பட்டுவிட்டதோடு, தமிழன்னைக்கு ஒரு தலைகுனிவையும் தக்கவைத்து விட்டோம் என்றால் அது மிகையாகாது.

எனவே எந்தவொரு அடிப்படை ஆதாரமுமற்ற இன்றுள்ள இந்திய தேச வரலாற்றை உண்மையென நம்பி, கிறிஸ்த்து பிறப்பிற்கு சற்று முன்னர் நம் தமிழின் தொன்மையை ஆரம்பமாகக் கொள்ளலாம் என்ற நப்பாசையால் தோற்றுவிக்கப்பட்ட இன்றுள்ள வள்ளுவர் ஆண்டு சற்றும் பொருத்தமற்ற ஒன்றே என்பது திண்ணம்.

### சாலி வாகன சகா

அடுத்து நாம் கிறிஸ்த்து பிறப்பிற்குப்பின் வரும்போது, கி.பி. முதல் நூற்றாண்டில் சாலி வாகனன் என்ற பேரரசன் தன் பேரால் கி.பி. 19.2.79 ஞாயிறு தமிழ் பகுதான்ய ஆண்டு மீனபங்குனி 4ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியை ஆரம்பமாகக் கொண்டு ஜெயபாரத யுதிஷ்ட்ரா சகா, விக்ரம சகா போன்றே, சாந்திரமான ரீதியில் ஒரு சகாவைத் தோற்றுவிக்க அந்த சகாதான் இன்றும் சாலிவாகன சகா என்று வழக்கில் இருந்து வருகிறது.

நம் மகரிஷிகள் பருவகால மாற்றங்களை அறிந்து செயல்படத்தான் அயனாம்சத்தை அளவிட்டு வந்தார்களே தவிர, காலத்தை துல்லியமாகக் கணக்கிட சௌரமானத்தையும், லௌகீக காரியங்களுக்கு சாந்திரமானத்தையுந்தான்லே அனுஷ்டானத்தில் வைத்துக் கொண்டுள்ளார்கள் என்பது உண்மை.

இது இவ்வாறிருக்க எவராலும் இன்றுவரை சரியாக நிர்ணயிக்கப்படாத அயனாம்ச அளவை அடிப்படையாகக் கொண்டு கி.பி. 19.02.79 ஞாயிறினின்று தொடங்கிய சாலிவாகன சகாவை, நம் இந்தியப் பேரரசால் 1956ல் நிர்ணயிக்கப்பட்ட பஞ்சாங்க சீர்திருத்தக்குழு, தேசிய ஆண்டாகக் கொண்டு அயனாம்சத்தை அடிப்படையாக வைத்து சகா ஆண்டாக சாந்திரமான ரீதியில் கணக்கிட்டு பஞ்சாங்கங்களில் இன்று குறிப்பிட்டு வருவது பொருத்தமான ஒன்றாகத் தெரியவில்லை. இது குழப்பத்திற்குரியதே என்பது உறுதி.



நம் பாரத தேசத்துப் புராதனச் சிறப்பை வெளிப்படுத்த வைவஸ்வத மனுவால் வேதாங்க சோதிஷா கூற்றுப்படி சௌரமானமும் சாந்திமானமும் இணைந்த கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு [illegible] முதல் நாள் மாகசுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் சரத்ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கிய சப்தரிஷி ஆண்டு ஒன்று இருக்கும்போது, கிறிஸ்த்து பிறப்பிற்குப் பின்னுள்ள கி.பி. 19.02.79 ஞாயிறினின்று தொடங்கப்பட்ட சாலிவாகன சகாவைத் தேசீய ஆண்டாகக் கொள்வது, நம் பாரதமாதாவை அடிமைத் தளையினின்று விடுவித்து 50 ஆண்டுகள் ஓடிவிட்டதற்கு அர்த்தமே இல்லை.

எனவே இன்றுள்ள தேசீய ஆண்டு உசிதமான ஒன்றல்ல என்பது எனது பணிவான கருத்தாம்.

### முகமது நபிகள் நாயகம் ஜனனம்

நம் முகமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனது கணிப்பில் கி.பி. 07.05.570 திங்கள்கிழமை தமிழ் விக்குருதி ஆண்டு ரிஷப வைகாசித் திங்கள் 13ஆம் நாள் வைசாக சுக்ல சதுர்த்தசி பின் பௌர்ணமி திதியும் விசாகம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் ரப்புலவல் மாதத்தில் 12ஆம் பிறையன்று மெக்காவில் அன்று அதிகாலை மணி 5.30க்கு அவதரித்தவராகிறார்.

இவர் கி.பி. 30.5.632 புதன்கிழமை தமிழ் நந்தன ஆண்டு மிதுன ஆனித்திங்கள் 4ஆம் நாள் ஹிஜிரி 11ஆம் ஆண்டில் ரபியுல்லாவல் மாதம் முதல் நாள் இறைவனடி சேர்ந்துள்ளார்.

### ஹிஜ்ரா சகாப்தத் தொடக்கம்

நபிகள் நாயகத்தின் அனைத்துக் கோட்பாடுகளையும் மக்கள் ஏற்றுக்கொண்டதன் அடையாளமாக ஆம்; அப்பெருமானரின் ஞாபகார்த்தமாக கி.பி. 19.07.622 வெள்ளிக்கிழமை தமிழ் சித்ர பானு ஆண்டு கடக ஆடித்திங்கள் 22ஆம் நாள் சிராவண சுக்ல திருதியை திதியும் பூர்வபல்குனி (பூரம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று மொஹரம் மாதம் முதல் பிறையாகக் கொண்டு ஹிஜ்ரா சகாப்தம் தொடங்கப்பட்டுள்ளதென்பது எனது கணிப்பு.

இஸ்லாமிய வானநூல் வல்லுனர்கள் ஒரு சாந்திரமான மாதத்திற்கு [illegible] நாட்களுக்குரிய 29 நாட்கள் 12 மணி 44 நிமிடம் [illegible] செகண்டுகள் என்பதை சற்று குறைவாக, அதாவது

1,334 செகண்டை விடுத்து கணக்கிட்டு வருவதால் சுமார் 1420 ஆண்டுகளில் 6 மணி 19 நிமிடங்களை இழந்துள்ளதாக அறியமுடிகின்றது.

### வைஷ்ணவ ஆச்சாரியார்கள் தோற்றம்

தமிழகத்தில் கி.பி. 500க்குப்பின் தோன்றிய ஒரு சில வைஷ்ணவ ஆச்சாரியார்களின் ஜனனத்தை குருபரம்பரா ஏடுகள் தரும் குறிப்புகளின்படி கீழே கணித்துக் கொடுத்துள்ளேன்.

உய்யக்கொண்டார் கி.பி. 03.04.526 புதன்கிழமை தமிழ் பராபவ ஆண்டு மேஷ சித்திரை 10ஆம் நாள் வைசாக சுக்ல திருதியை திதியும் கார்த்திகை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

மணக்கால் நம்பி கி.பி. 08.02.532 வெள்ளிக்கிழமை தமிழ் விரோதி கிருது ஆண்டு கும்பமாசி 16ஆம் நாள் பல்குன பௌர்ணமி திதியும் மக நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

நாதமுனிகள் கி.பி. 11.06.583 புதன்கிழமை தமிழ் சோப கிருது ஆண்டு மிதுன ஆனி 17ஆம் நாள் ஆஷாதா சுக்ல திரயோதசி திதியும் அனுசம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

இம் மூவரும் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் அவதரித்திருக்கும்போது நாம் கி.மு. 2700க்கு முன் பிறந்த பன்னிரு ஆழ்வார்களையும், கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு முடியவுள்ள 400 ஆண்டுகளுக்குள் தோன்றியதாகக் கொள்வது தவறேயாம்.

ஆளவந்தார் கி.பி. 22.07.916 புதன்கிழமை தமிழ் தாது ஆண்டு கடக ஆடித்திங்கள் 22ஆம் நாள் சிராவண சுக்ல சதுர்த்தசி திதியும் உத்திராடம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

திருக்கச்சி நம்பிகள் கி.பி. 02.02.1010 வெள்ளிக்கிழமை தமிழ் சௌமிய ஆண்டு கும்பமாசி 4ஆம் நாள் மாக சுக்ல தசமி திதியும் மிருகசீரிஷம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.



ஸ்ரீ ராமானுஜர் கி.பி. 11.4.1017 வெள்ளிக்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு மேஷ சித்திரை 12ஆம் நாள் வைசாக சுக்ல சஷ்டி திதியும் திருவாதிரை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

அவர் கி.பி. 02.03.1078 சனிக்கிழமை தமிழ் பிங்கள ஆண்டு மீன பங்குனி முதல் நாள் பல்குன சுக்ல தசமி திதியும் திருவாதிரை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் முக்தியடைந்துள்ளார்.

பெரியவாச்சான்பிள்ளை கி.பி. 14.08.1227 சனிக்கிழமை தமிழ் சர்வஜித் ஆண்டு சிம்ம ஆவணி 8ஆம் நாள் சிராவண பகுள அஷ்டமி திதியும் ரோகிணி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

வேதாந்த தேசிகன் கி.பி. 15.09.1269 ஞாயிறு தமிழ் சுக்ல ஆண்டு புரட்டாசித் திங்கள் 10ஆம் நாள் பாத்ரபத சுக்ல ஏகாதசி திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளார்.

### பரமேஸ்வர வர்மன் செப்பேடு

இந்த செப்பேட்டில் 'ஆதித்ய தினா, பௌஷதை, திரயோதசி திதி' என குறிப்பிடப்பட்டுள்ளதால் வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டு அந்தச் செப்பேடு கி.பி. 13.01.689 ஞாயிறு தமிழ் சர்வதாரி ஆண்டு மகரத்திங்கள் 18ஆம் நாள் மாக சுக்ல திரயோதசி திதியும் புனர்பூசம் நட்சத்திரமுங்கூடிய தினமாகத் தீர்மானிக்க முடிகின்றது.

### அம்பிகாபுரம் கல்வெட்டு

இக் கல்வெட்டு காஞ்சி சங்கர மடத்திற்கு நிலம் வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகிறது. அதில் "கர ஆண்டு கற்கடக ஆடி, சோமவரம், தசமி திதி, அனுராதா நட்சத்திரம்" என குறிப்படப்பட்டுள்ளது.

இது எனது கணிப்பில் கி.பி. 24.07.1111 திங்கள்கிழமை தமிழ் கர ஆண்டு கடக ஆடித்திங்கள் 20ஆம் நாள் சிராவண சுக்ல தசமி திதியும் அனுராதா (அனுசம்) நட்சத்திரமுங்கூடிய தினமாம் என்பது உறுதி.

குருநானக் கி.பி. 29.10.1469 வெள்ளிக்கிழமை தமிழ் விரோதி ஆண்டு துலா ஐப்பசித் திங்கள் 20ஆம் நாள் கார்த்திகா பௌர்ணமி திதியும் அசுவதி பின் பரணி நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்துள்ளதாக அறிய முடிகின்றது.

ஸ்ரீகுமரகுருபரர் சாலிவாகன சகா 1547ல் கி.பி. 04.07.1625 வெள்ளிக்கிழமைக்குச் சரியான தமிழ் குரோதன ஆண்டு மிதுன ஆனித்திங்கள் 26ஆம் நாள் அமாவாசை திதியும் திருவாதிரை நட்சத்திரமுங்கூடிய தினத்தில் அவதரித்தவராகிறார்.

அவர் சாலிவாகன் சகா 1610ல் கி.பி. 18.05.1688 செவ்வாய்க்கிழமைக்குச் சரியான தமிழ் விபவ ஆண்டு ரிஷப வைகாசித் திங்கள் 10ஆம் நாள் வைசாக பகுள திருதியை திதியும் மூலம் நட்சத்திரமுங்கூடிய தினத்தில் முக்தியடைந்துள்ளார்.

## கிருதயுகம் முடிவு

இவ்வாறாக கி.மு. 28.12.3101 ஞாயிறு தமிழ் கும்பமாசி முதல் நாள் மாக சுக்ல பிரதமை திதியும் சிராவிஷ்டா (அவிட்டம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் வசந்த ருதுவில் சம்வத்ஸரா ஆண்டாகத் தொடங்கிய பிர்மாவின் பகல் பொழுதான 29வது மகாயுகத்தில், முதல் யுகமான கிருதயுகத்தை வேதாங்க சோதிஷாப்படி யுகசந்தியுள்பட 4864 ஆண்டுகளுக்குப்பின் கி.பி. 08.02.1765 வெள்ளிக்கிழமை தமிழ் தாரண ஆண்டு மகர தைத்திங்கள் கடைசி நாளுடன் முடித்துக்கொண்டுள்ளோம்.

எனவே மேலே குறிப்பிட்ட 4864 ஆண்டுகளும் கிருதயுகமே என்பதை உறுதிப்படுத்துமளவுக்கு கி.பி. 700ல் காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னனும், கி.பி. 800ல் கம்போடியாவை ஆண்ட இந்திரவர்மனும் தங்கள் காலம் கலியுகமல்ல கிருதயுகமே என கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ளதினின்று இது எனது கணிப்பை ஊர்ஜிதம் செய்வதாகவுள்ளது.

## திரேதாயுகத் தொடக்கம்

அக் கிருதயுகத்திற்குப் பின் நடப்பு திரேதாயுகம் கி.பி. 09.02.1765 சனிக்கிழமை தமிழ் தாரண ஆண்டு கும்பமாசி முதல் நாள் மாக பகுள சதுர்த்தி திதியும் உத்திர பல்குனி (உத்திரம்) நட்சத்திரமுங்கூடிய தினத்தில் ஆரம்பமாகியுள்ள தென்பதை அறிய முடிகின்றது.



நம்வேதங்களில் வேதாங்க சோதிஷாதரும் வானியல் நியதிப்படி நாம் கி.பி.09.02.1765 சனிக்கிழமையினின்று திரேதாயுகத்தில் தான் வாழ்வதாகவுள்ளோம் என்பது திண்ணம்.

இன்றுள்ள கற்பனையான கலியுகத்தை மறந்துவிட்டு, என்னால் கி.பி. 9.2.1765 சனிக்கிழமையினின்று ஆரம்பமானதாகத் தேடிப்பிடிக்கப்பட்ட திரேதாயுகத்தை வெளிக்கொணர்ந்து அதன்படிகீழே கண்டவாறு இனி பஞ்சாங்கங்களில் குறிப்பிட்டுக் காலத்தை கணக்கிட வேண்டுமென்பது எனது பணிவான வேண்டுகோள்.

## கையாளவேண்டிய காலக் கணிப்பு

நம் பாரத தேசத்தில் வரலாறு தரும் முதல் மனித குலத் தோன்றலான வைவஸ்வத மனுவால் கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமையினின்று தொடங்கப்பட்ட சப்தரிஷி சகாப்தத்தில் நாம் கி.பி. 12.02.1999 வெள்ளிக்கிழமையுடன் 17258 ஆண்டுகளை முடித்துக்கொண்டு கி.பி. 13.02.1999 சனிக்கிழமையினின்று 17259ஆம் ஆண்டில் நுழைந்துள்ளோம்.

அடுத்து கி.பி. 12.2.2001 திங்கள் கிழமையினின்று 17261ஆம் ஆண்டைத் தொடங்கவுள்ளோம்.

அதாவது 108வது மாக சைக்கிளில் 141ஆம் ஆண்டிலாம் என்பது உறுதி.

யுதிஷ்டிரரால் கி.மு. 27.12.3140 ஞாயிறு முதல் தொடங்கப்பட்ட யுதிஷ்டிர சகாவில் கி.பி. 12.2.1999 வெள்ளிக்கிழமையுடன் 5137 ஆண்டுகளை நாம் முடித்துக்கொண்டு கி.பி. 13.02.1999 சனிக்கிழமையினின்று 5138 ஆம் ஆண்டில் அடிவைத்துள்ளோம்.

அடுத்து கி.பி. 12.2.2001 திங்கள் கிழமையினின்று நாம் 5140வது ஆண்டை தொடங்கவுள்ளோம்.

நாம் கி.மு. 06.02.3101 வியாழக்கிழமையினின்று தொடங்கப்பட்ட [illegible] யுதிஷ்டிராசகாவில் கி.பி. 17.03.1999 புதன்கிழமையுடன் சாந்திரமான ரீதியில் 5099 ஆண்டுகளை முடித்துக்கொண்டு கி.பி. 18.03.1999 வியாழக்கிழமையினின்று 5100 வது ஆண்டில் புகுந்துள்ளோம்.

அடுத்து கி.பி. 5.4.2000 புதன்கிழமையினின்று தொடங்கவுள்ளது 5101வது ஆண்டே.

நாம் நம் சித்தாந்த வானநூல் வல்லுனர்களால் கி.பி.500 வாக்கில் உண்மைக்கும், வேதகால வானியலுக்கும் முரணாக சிதைவுற்ற புராணங்களின் அடிப்படையில் கி.மு. 25.02.3101 செவ்வாய்க்–கிழமையினின்று தோற்றுவித்து இன்று பஞ்சாங்கங்களில் இடம் பெற்றுள்ள கற்பனையான கலியுகத்தில் கி.பி. 13.04.1999 செவ்வாய்க்கிழமையுடன் 5099 ஆண்டுகளை முடித்துக்கொண்டு கி.பி. 14.4.1999 புதன்கிழமையினின்று 5100 வது ஆண்டை அனுகியுள்ளோம்.

இந்த 5100 வது ஆண்டை கி.பி. 12.04.2000 புதன்கிழமையுடன் முடித்துக்கொண்டு கி.பி.13.04.2000 வியாழனின்று 5101 வது ஆண்டை அனுகவுள்ளோம். ஆம் 52வது நூற்றாண்டைத் தொடங்கவுள்ளோம்.

அதாவது 60 ஆண்டுகள் கொண்ட பிரபவாதி சைக்கிளில் 85 சைக்கிள்களை முடித்துக்கொண்டு கி.பி. 13.04.2000 வியாழனின்று 86வது சைக்கிளைத் தொடரவுள்ளோம்.

நாம் கி.மு.28.12.3101 ஞாயிறினின்று தொடங்கப்பட்ட பிர்மாவின் பகல் பொழுதான 29வது நடப்பு மகாயுகத்தில் கி.பி. 12.02.1999 வெள்ளிக்கிழமையுடன் 5098 ஆண்டுகளை முடித்துக்கொண்டு கி.பி. 13.02.1999 சனிக்கிழமையினின்று 5099வது ஆண்டைத் தொடங்கியுள்ளோம்.

அடுத்து கி.பி. 12.2.2001 திங்கள்கிழமை முதல் 5101வது ஆண்டை தொடங்கவுமுள்ளோம்.

நாம் கி.பி. 09.02.1765 சனிக்கிழமையினின்று தொடங்கிய நடப்பு திரேதாயுகத்தில் கி.பி. 12.02.1999 வெள்ளிக்கிழமையுடன் 234 ஆண்டுகளை முடித்துக்கொண்டு கி.பி. 13.02.1999 சனிக்கிழமையினின்று 235ஆம் ஆண்டில் அடி வைத்துள்ளோம்.

அடுத்து கி.பி. 12.2.2001 திங்கள் முதல் 237வது ஆண்டை தொடங்கவுள்ளோம்.

நாம் கி.பி. 17.03.1999 புதன்கிழமையுடன் விக்ரம சகாவில் 2055 ஆண்டுகளையும் சாலிவாகன சகாவில் 1920 ஆண்டுகளையும் முடித்துக் கொண்டு கி.பி. 18.03.1999 வியாழக்கிழமையினின்று விக்ரமசகாவில் 2056ஆம் ஆண்டையும், சாலிவாகன சகாவில் 1921ஆம் ஆண்டையும் தொடங்கியுள்ளோம்.

அடுத்து கி.பி. 5.4.2000 புதன்கிழமையன்று விக்ரமசகாவில் 2057வது ஆண்டையும், சாலிவாகன சகாவில் 1922வது ஆண்டையும் தொடங்கவுமுள்ளோம்.



நாம் கி.மு. 13.10.15261 வெள்ளியினின்று தொடங்கப்பட்ட சப்தரிஷி ஆண்டு, கி.மு. 27.12.3140 ஞாயிறினின்று தொடங்கப்பட்ட யுதிஷ்டிராசகா, கி.மு. 06.02.3101 வியாழனின்று தொடங்கப்பட்ட ஜெயபாரத யுதிஷ்டிரா சகா, கி.மு. 28.12.3101 ஞாயிறினின்று வேதாங்க சோதிஷாப்படி தொடங்கப்பட்ட 29வது மகாயுகத் தொடக்கம், கி.மூ. 12.03.57 ஞாயிறினின்று தொடங்கப்பட்ட விக்ரமசகா ஆகிய வரலாற்றுச் சிறப்புமிக்க ஐந்தும் கிறிஸ்து பிறப்பிற்கு முன்னதாகவே உள்ளதை விடுத்து, கிறிஸ்து பிறப்பிற்குப் பின்னுள்ள கி.பி.19.02.79 ஞாயிறில் ஆரம்பமான சாலிவாகன சகாவைத் தேசிய ஆண்டாகக் கொள்வது ஏனோ ?

ஸ்ரீ கிருஷ்ணன் கி.மு. 06.02.3101 வியாழன் தமிழ் பிரமாதி ஆண்டு மீன பங்குனி 12ஆம் நாள் சைத்ர சுக்ல பிரதமை திதியன்று பரமபதம் அடைய, அன்னாரின் ஞாபகார்த்தமாகத் தொடங்கப்பட்ட ஜெயபாரத யுதிஷ்டிரா சகாவை, நாம் சாந்திரமான ரீதியில் தொடங்கப்பட்டதாகக் கொண்டு அந்தந்த ஆண்டை பல்குனி அமாவாசையுடன் முடித்துக் கணக்கிட்டு மேலே கூறப்பட்ட அனைத்தையும் பஞ்சாங்கங்களில் குறிப்பிட்டு நடைமுறைக்குக் கொண்டுவருவதே சாலச் சிறப்பாம்.

அஃதே போன்று அந்த கி.மு. 06.02.3101 வியாழனின்று 19 நாட்களுக்குப் பின்னுள்ள கி.மு. 25.02.3101 செவ்வாய்க்கிழமை தமிழ் விக்ரம ஆண்டு மேஷ சித்திரை முதல் நாளினின்று தவறாக கலியுகம் தொடங்கியதாகக் கணக்கிடப்பட்டு இன்று பஞ்சாங்கங்களில் இடம் பெற்றுள்ளதை நாம் விடுத்து வேண்டுமானால், அதை ஸ்ரீ கிருஷ்ணனின் ஞாபகார்த்தமாக சௌரமான ரீதியில் தொடங்கப்பட்ட ஜெயபாரத யுதிஷ்டிராசகா எனக் கொள்வதே நலமாம்.

ஒவ்வொரு மகாயுகத்திலுமுள்ள நான்கு யுகங்களில் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் ஆகிய மூன்றும் அசுரர்கள் பலரின் அச்சுறுத்தல்களுக்கு ஆளாகாத அப்பழுக்கற்ற, நீதி நெறி தவறாத யுகங்கள் போன்றும், கலியுகம் ஒன்றுதான் கொடியது போலவும் புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

அது உண்மையென்றால் வைவஸ்வதமனுவுக்குப் பின் அக் கிருதயுகத்தில் மச்சம், கூர்மம், வராகம், வாமனம் நரசிம்மம் போன்ற அவதாரங்களும், அடுத்த திரேதாயுகத்தில் இராமாவதாரமும் ஏன் ? நிகழ்ந்துள்ளன !

அந்தந்த யுகங்களில் மக்கள் பெருக்கம் ஏற்பட்டு அராஜகம் வளர்ந்து அசுரர்களின் அச்சுறுத்தல்களுக்கு ஆளாகும் நிலை இருந்து வந்துள்ளதால் தான் அவ்வப்போது இறைவன் 1216 ஆண்டுகளுக்கு ஒரு முறை ஓர் அவதார புருஷராகத் தோன்றியுள்ளார் என்பதை அறிய முடிகின்றது.

இதினின்று கிருதயுகம் முதல் துவாபரயுகம் வரை மூன்று யுகங்களிலும் படிப்படியாக அராஜகங்கள் வளர, அவ்வப்போது அதை அடக்கி ஒடுக்க அவதார புருஷர்கள் தோன்றுவதையும், ஆனால் கடைசியுகமான கலியுகத்தில் அந்த மூன்று யுகங்களிலுமில்லாத அளவுக்குக் கொடூரம் நிறைந்து, அப்போதும் ஆன்றோர் பலர் பிறந்து நீதி நெறிகளைப் புகட்ட பாடுபட்டும்கூட அது இயலாமற்போக ஒரு வழியாக ஒழித்து ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க வேண்டிய நிர்ப்பந்தம் நேரிட்ட போதுதான் 27வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகத்தில் ஸ்ரீ ஸ்கந்தனும், 28வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணனும் தோன்றியிருக்கக் கூடுமென்பதை உணர முடிகின்றது.

உண்மையில் நாம் கலியுகத்தினின்று விடுபட்டு 5100 ஆண்டுகளைக் கடந்து, அடுத்த கலியுகத்தைப் பிடிக்க இன்னும் 5844 ஆண்டுகள் காத்திருக்கவுள்ளபோது, இன்று நடப்பது கலியுகமென்பது, நம் வேதகால வானியலுக்கு முரண்பட்ட ஒன்றே என்பது திண்ணம்.

இன்று நாம் வசிப்பது திரேதாயுகத்தில் 236ஆம் ஆண்டே என்பதால் இன்றுள்ள அவல நிலையை எண்ணிப் பார்க்கும் போது இன்னும் 5844 ஆண்டுகளுக்குப் பின் வரவுள்ள கலியுகம் எவ்வாறு ? இருக்குமென்பதை நாம் புரிந்து கொள்ளலாம். ஆம்; அவ்வளவு கொடூரம் நிறைந்ததாக அது காட்சி தரும் என்பது உண்மையே.

### இன்று நாம் வசிப்பது கலியுகம் அல்ல

எனவே நம் மகரிஷிகள் வேதங்களில் குறிப்பிட்ட வானியல் நியதிப்படி இன்று நாம். வசிப்பது 28வது மகாயுகத்தின் கடைசியுகமான கலியுகமல்ல.



அதற்கடுத்த நடப்பு 29வது மகாயுகத்தின் இரண்டாவது யுகமான திரேதாயுகமே என்பது உறுதி.

### காணவுள்ள கல்கி அவதார காலம்

இந்த திரேதாயுகம் முடிந்து அதற்கடுத்த துவா பரயுகமும் முடிந்து கி.பி. 4.5.7845 ஞாயிறினின்று ஆரம்பமாகவுள்ள கலியுகத்தில் தான் ஸ்ரீ நாராயணனின் பூர்ணாவதாரமான அடுத்த கல்கி அவதாரத்தை நாம் இனி காணமுடியும் என்பது எனது கணிப்பு.

### நடந்து விட்ட தவறுகள்

நம்நாட்டு மேல்நாட்டு வானநூல் வல்லுனர்கள் இன்றுவரை ஒரு சௌரமான ஆண்டின் உண்மையான அளவை நிர்ணயித்துக் கொள்ளத் தவறிவிட்டார்கள் என்பதையும், அஃதே போன்று அயனாம்ச அளவையும் நிர்ணயித்துக் கொள்ளவில்லை என்பதையும் அவர்கள் அனைவரும் எடுத்துக்கொண்ட கீழ்க்காணும் வேறுபட்ட தனித்தனி அளவுகளைக் கொண்டு அறிந்து கொள்ளலாம்.

| சௌரமான ஆண்டு | | |
|---|---|---|
| 1. சூரிய சித்தாந்தா | 365.2572222 | நாட்கள் |
| 2. வாக்கிய சித்தாந்தா | 365.258681713 | நாட்கள் |
| 3. சுவாமிக்கண்ணு பிள்ளை | 365.258756484 | நாட்கள் |
| 4. பெண்ட்ளே | 365.2584375 | நாட்கள் |
| 5. நியுகோம்ப் | 365.2568984 | நாட்கள் |
| 6. நாட்டிகல் ஆல்மனக் | 365.25636242 | நாட்கள் |
| 7. திருக்கணிதம் | 365.256294398 | நாட்கள் |
| 8. எனது அளவு | 365.25625 | நாட்கள் |

நான் எடுத்துக்கொண்ட உண்மையான அளவையிட திருக்கணிதம் ஒரு ஆண்டில் 3.836 செகண்டுகளும், நாட்டிகல் ஆல்மனாக் (அரசு) அளவு ஒரு ஆண்டில் 9.713 செகண்டுகளும் கூடுதலாகவுள்ளன.

மற்ற அனைத்தும் சுமார் 3 நிமிடங்கள் வரை கூடுதலாகவுள்ளதால் ஒரு மகாயுகமான 12160 ஆண்டுகளில் சுமார் 30 நாட்கள் வரை கூடுதலாகவுள்ளதாக அறிய முடிகின்றது.

இதினின்று ஒரு ஆண்டின் உண்மையான அளவை எடுத்துக் கொள்ளத் தவறியது, ஒரு மாக சைக்கிளான 160 ஆண்டுகளுக்கு ஒரு முறை சௌரமானமும் சாந்திரமானமும் ஒன்றுபடுவதை உணராதது, இது போன்ற 76 மாக சைக்கிள்கள் கொண்ட ஒரு மகாயுகமான 12160 ஆண்டுகளுக்கு ஒரு முறை அனைத்துக் கோள்களும் கூடிப் பிரிவதை அறிந்துகொள்ளத் தவறியது. அயனுக்கொரு நாளாம் இரு மகாயுகங்கள் கொண்ட 24320 ஆண்டுகளுக்கொருமுறை கோள்களின் இயக்கமும் அயனாம்ச இயக்கமும் ஒன்றுபடுவதை தெரிந்து கொள்ளாதது இது போன்ற காரணங்களால் வேதகால வானியல் நம்மைவிட்டு மறைந்து அனைவருக்கும் சுவையுள்ள வானியல்கலை ஒரு சுவையற்றப் பாடமாக அமைந்துவிட்ட தென்பதை அறியமுடிகின்றது.

அயனாம்சம் (Precession of Equinox)

| | |
|---|---|
| ஆர்யபட்டா | 46.3" |
| பராசரா | 46.5" |
| வராகமிகிரா | 50.0" |
| சூர்ய சித்தாந்தா | 54.0" |
| பாஸ்கரா | 59.9" |
| கிரகலாகவா | 60.0" |
| எனது அளவு | 53.2894736842" |

இதில் சூர்ய சிந்தாந்த அளவுதான் சற்று கூடுதலாகவுள்ளது. மற்ற அனைத்தும் இதன் உண்மைப் பொருளை உணராதவர்களாக கூடுதல் குறைவாகவே நிர்ணயிக்கப்பட்டனவாகத் தெரிகிறது.

இன்னோரன்ன தவறுகளாலும் கி.மு. 3101க்கு முன்னுள்ள கலியுகத்தை துவாபரயுகமெனக் கொண்டு அதற்கு 8 லட்சத்து 64 ஆயிரம் ஆண்டுகளாகவும், கி.மு. 3101லிருந்து தொடங்கப்படவுள்ள கிருதயுகத்தை கலியுகமெனக் கொண்டு அதற்கு 4 லட்சத்து 32 ஆயிரம் ஆண்டுகளாகவும் கொண்டுவிட்ட ஒரே காரணத்தாலும், நம் பாரத தேசத்துப் புராதன வரலாறு சந்தேகத்திற்கிடமாகி ஸ்ரீ முருகன், ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன்



ஆகியோர் கற்பனை நாயகர்களாகி நம் தமிழகத்தின் தொன்மை கி.மு. 16500 லிருந்து கி.மு. 500க்குக் கீழே கொண்டு வரப்பட்டு விட்டதென்பதை உறுதியெனக் கொள்ள முடிகின்றது.

இவ்வாறு நாம் செய்த தவறால் ஒரு பாவமும் அறியாத வால்மீகியும் வியாசரும் பெரும் பழியைச் சுமந்தவர்களாகியுள்ளார்கள்.

## முடிவுரை

நம் நாட்டு மேல்நாட்டு வானியல் வல்லுனர்கள் செய்துவிட்ட பணி மகத்தானதே.

நான் அவர்களைப் பற்றி குறையேதும் கூற விரும்பவில்லை. அவர்கள் அனைவரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியதே எனது ஆய்வின் வடிப்பாம்.

உண்மையில் கலியுகம் கி.மு. 3101ல் முடிந்து பின் கிருதயுகம் ஆரம்பமாகி அதில் பாண்டவர்கள் ஆட்சி சுமார் 500 ஆண்டுகள் ஓடிவிட, அதன்பின் ஜைன, பௌத்த மதங்கள் பரவி அண்டை நாடுகளில் வேரூன்றி, இந்து மதம் மறைந்து வேதபுரான இதிகாசங்கள் மக்கள் மத்தியில் மறைய, அதற்கு ஆதரவாக அக்காலங்களில் பாரததேசம் வெள்ளம், புயல், பூகம்பம் போன்ற இயற்கைச் சீற்றங்களுக்கு உட்பட்டு ஆங்காங்கே மதக் கலவரங்கள் தோன்றி தேசம் சின்னா பின்னப்பட்டு பேரரசுகள் மறைந்து குறுநில மன்னர்களின் ஆட்சி நடந்துள்ளதை நாம் கி.மு. 500 வரைக் காணமுடிகிறது.

அதன்பின் கி.மு. 509ல் தோன்றிய ஆதிசங்கரர் இந்து மதத்திற்குப் புத்துயுரூட்டி அதைப் பொலிவுறச் செய்து ஜைன பௌத்த மதங்களை மறையச் செய்து இந்து மதம் பாரதம் எங்கும் பரவ வழி வகுத்தாலும், அது பூர்ணப் பொலிவுடன் திகழ அன்னிய தேசத்தவர் வருகையும் முகம்மதியர்களின் தொடர்படையெடுப்புகளும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை, தடை கற்களாகவே இருந்து வந்துள்ளன.

அத்துடன் கலியுகத்திற்கு யுகசந்தி நீங்கலாக 1200 ஆண்டுகள்தான் என்று இருக்கும் போது கி.மு. 3101க்குப்பின் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேல் ஒடிய நிலையில் அதை நியாயப்படுத்த அந்த 1200 என்பது தேவமானமென்றும், அதை 360ஆல் பெருக்கி வந்ததுதான் மனுஷ்யமானமென்றும் தவறாகக் கருதி இவ்வாறாக அப்போது வாழ்ந்த நம் பௌராணீகர்கள் புராணங்களை எழுதியதோடு ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன் ஆகியோரை மானிட வர்க்கத்தினின்று வேறுபடுத்திக் காட்ட ஒன்றை ஆயிரமாகவும் பெரிதுபடுத்தி அலங்காரமாக புராணங்களை எழுதியுள்ளார்கள் என்பதுதான் உண்மமை..

ஆக, பழம் பெரும் புராணங்களின் வாயிலாகவும் கல்வெட்டுக் குறிப்புகள் மூலமாகவும் கி.பி. 400 வரை எதிலும் காணப்படாத கலியுகம் எப்படியோ வழக்கில் வந்துவிட்டது என்பதை அறிய முடிகின்றது.

இதை அடிப்படையாகக் கொண்டு அதன்பின் வந்த நம் சித்தாந்த வானநூல் வல்லுனர்கள் அப்போது சோதிடக் கலையின் நிமித்தம் ஒரு ஆண்டை மேஷ சித்திரை முதல் நாளில் தொடங்கி அந்தந்த ஆண்டை மீனபங்குனி கடைசி நாளுடன் முடிக்கும் பழக்கம் இருந்ததால் கி.மு. 25.02.3101 செவ்வாய்க்கிழமையை தமிழ் விக்ரம ஆண்டு மேஷ சித்திரை முதல் நாளாகக் கொண்டு சௌரமான ரீதியில் கலியுகத்தை பஞ்சாங்கங்களில் கணித்து நடைமுறைக்குக் கொண்டு வந்துவிட்டார்கள்.

அன்று சைத்ர பகுள சஷ்டி திதியும் கேட்டை பின் மூல நட்சத்திரமுங் கூடிய தினமாம் என்பது எனது கணிப்பு.

இதுவும் போதாதென்று கி.பி. 18ஆம் நூற்றாண்டில் மேல்நாட்டு வானநூல் வல்லுனர் திரு. பெண்ட்ளே அவர்கள் கி.மு. 3102ல் கலியுகம் தோன்றியதாகக் கணக்கிட்டுக்கூற அதையும் நம்மவர்கள் ஏற்றுக்கொண்டதுடன் அதன்படியும் கலியுக ஆண்டைக் கணக்கிட்டும் வருகிறார்கள்.



ஆதிசங்கரருக்குப்பின் அவர்வழி வந்த மடத்ததிபதிகளும், சைவ வைஷ்ணவப் பெரியோர்களும் மறைந்து கிடந்த வேத புராண இதிகாசங்களையும், உபநிஷத்துகளையும், ஒரு சிலர் மூலம் கிடைத்தனவற்றையும் கேட்டனவற்றையும் ஆதாரமாகக் கொண்டு புதுப்பித்து எழுத முற்பட்ட நிலையைக் காண முடிகின்றது.

இந்த நிலையில் கி.மு. 3101க்கு முன்னுள்ள கலியுகத்தில் நடந்த அராஜகங்கள் பற்றி பழம் புராணங்களின் வாயிலாக படித்தறிந்தபோது அத்தகைய வன்முறைகள் சுமார் 3000 ஆண்டுகளுக்குப்பின் கி.பி.300 வாக்கில் மீண்டும் மக்களிடையே பரிணாம வளர்ச்சியில் தென்பட, இதுவும் கலியுகமென்ற நிலை மக்களிடையே நிலவியுள்ளதாக அறியமுடிகின்றது.

ஸ்ரீ கிருஷ்ணன் மறைவுக்குப்பின் யாதவர்களிடையே தோன்றிய உச்சக்கட்ட அராஜகத்தைப் பற்றி, சகாதேவன், கலி தன் இறுதித் தோற்றத்தைக் காண்பித்துள்ளது என்று கூற அதை தவறாக கலியின் ஆரம்பகட்டமென்று எண்ணி ஸ்ரீ கிருஷ்ணன் துவாபரயுக அவதார புருஷர் போலவும் அவருக்குப்பின் கலியுகம் போலவுமுள்ள கருத்தும் மக்களிடையே தோன்றலாயிற்று.

இவ்வாறாக கலியுகம் பிறக்கப்போகிறது, என்று எண்ணியே ஸ்ரீ கிருஷ்ணனும் பின் பாண்டவர்களும் மறையத் தொடங்கியதான கருத்தும் மக்களிடையே ஊன்றிவிட்டன.

இதையெல்லாம் ஆதாரமாகக் கொண்டு அன்றாடம் கூறப்படும் சங்கல்பத்தில் "கலியுகே" என்ற சொல்லைப் புகுத்தினார்களோ ! அல்லது மகாயுக மாற்றம், யுக மாற்றம் இவற்றையெல்லாம் கடந்து சங்கல்பத்தில் "கலியுகே" என்ற சொல் மாறாமல் இடம்பெற்று இருந்து விட்டதோ தெரியவில்லை.

அப்போது மக்கள் மத்தியில் நிலவிய கருத்துக்கு, இந்த மாறாமல் இருந்துவிட்ட சங்கல்பம் ஒன்றே காரணமாகவும் அமைந்திருக்கலாம்.

எனவே கற்பனையாக எழுதப்பட்டுவிட்ட புராணங்களை உண்மையென நம்பி, நம்மவர்களால் கி.மு.3101லிருந்து தோற்றுவிக்கப்பட்ட கலியுகமும், திரு. பெண்ட்லே அவர்களால் தவறாக கி.மு. 3102ல் தோன்றியதாகக் கணிக்கப்பட்ட கலியுகமும் நம் வேதகால வானியலுக்குச் சற்றும் பொருந்தாத ஒன்றாம் என்பது உறுதி.

அஃதே போன்று மேல் நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்கள் எழுதிவிட்ட கற்பனையான இந்திய தேச வரலாற்றை உண்மையென நம்பி கி.மு. 32லிருந்து கணக்கிடப்பட்ட இன்றுள்ள வள்ளுவர் ஆண்டும் தவறே என்பது திண்ணம்.

நம் பாரத மாதாவின் சாபத்திற்குக் கலியுகமும், அஃதே போன்று நம் தமிழன்னையின் கோபத்திற்கு வள்ளுவர் ஆண்டும் இன்று வரலாற்றில் இடம் பெற்று விட்டன என்றால் அது மிகை ஆகாது.

இவ்விரண்டையும் மறந்து, நான் கொடுத்துள்ள வானியல் ரீதியிலான வரலாறு சம்பந்தப்பட்ட குறிப்புகளின் காலத்தை அடிப்படை ஆதாரமாக ஆம்; வழிகாட்டலாகக் கொண்டு வேதகால வானியலைப் புரிந்து மீண்டும் சங்க இலக்கியங்களையும், திருவாசகம், தேவாரம், இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றைப் படித்து, நம் பாரத தேசத்து வரலாற்றை புதுமெருகிட்டு எழுதினால் நம் தேசத்துப் புராதன வரலாறு, குறிப்பாகத் தமிழக வரலாறு உலகிற்கே முதன்மையான ஒன்றாகும் என்பது தெளிவாம்.

ஆக கி.மு. 16500 முதல் கி.பி. 2000 முடியவுள்ள 18500 ஆண்டுகள் கொண்ட நம்பாரத தேசத்துப் புராதன வரலாற்றை கி.மு. 300 முதல் கி.பி.2000 முடியுவல்ள 2300 ஆண்டுகளாகக் கொண்டது குண்டுசி முனை இடத்தில் கோபுரம் கட்டிய கதையாம்.

இன்றுள்ள கிரிகோரியன் காலண்டர் நியதியில் 2000 ஆண்டுகளில் 27.50 நாட்களை இழக்கிறோம். இதை சரிசெய்து கொள்ளவுள்ள காலம் வெகு தொலைவில் இல்லை.

*வாழ்க வேதகால வானியல்*
*வளர்கநம் சங்ககாலத் தமிழ் !*



குறிப்புகள் :

1. கி.மு.11.12.15295 திங்கள்கிழமை தமிழ் பிரபவ ஆண்டு மேஷ சித்திரை முதல் நாள் சைத்ர சுகுள பிரதமை திதியும் சித்திரை நட்சத்திரமுங்கூடிய தினமாம். அன்று சூரியன் அதிகாலை மணி 4.41க்கு மேஷ ராசியில் பிரவேசித்துள்ளார் என்பதால், நாம் முதல் நாள் மாலை மணி 6 லிருந்து 44525 நாளுக்குப்பின் எனக்கொண்டு அதை கூட்டி தமிழ் ஆண்டு, மாதம், தேதி, கிழமை, திதி, நட்சத்திரம், ஆகியவற்றை கணிக்கலாம்.

2. கி.மு. 12.10.15261 வியாழன் தமிழ் சார்வரி ஆண்டு மகர தைத்திங்கள் கடைசி நாள் பௌஷ அமாவாசை திதி அன்று காலை மணி 10.30 வரை இருந்துள்ளது. எனவே .1875 நாளை கூட்டி திதி காணலாம். அன்று சூரியன் மாலை 6.18க்கு கும்ப ராசியில் பிரவேசித்துள்ளார் என்பதால் 0125 நாளைக் கூட்டி கணக்கிட்டு சப்தரிஷி ஆண்டை கி.மு. 13.10.15261 வெள்ளிக்கிழமை தமிழ் சார்வரி ஆண்டு கும்ப மாசி முதல் நாளினின்று கணக்கிட்டு ஆண்டு, மாதம், தேதி, கிழமைகளை நிர்ணயிக்கலாம்.

3. கி.மு. 26.09.15265 வியாழக்கிழமை தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 14ஆம் நாள் பௌஷ அமாவாசையன்று அனைத்துக் கோள்களும் 300 டிகிரிக்கு இரு மருங்கிலும் 120 டிகிரிகளுக்குள் இடம் பெறுவதால் அத்தேதிக்கு மறுநாள் கி.மு. 27.09.15265 வெள்ளிக்கிழமை மாக சுக்ல பிரதமை திதியும் திருவோணம் நட்சத்திரமுங்கூடிய தினத்தினின்று கணக்கிட்டு கோள்களின் நிலையை அறியலாம்.

4. கி.மு. 03.10.15265 வியாழன் தமிழ் துர்முகி ஆண்டு மகர தைத்திங்கள் 21ஆம் நாள் மாக சுக்ல சப்தமி திதியும் அசுவதி நட்சத்திரமுங்கூடிய தினம் வைவஸ்வத மன்வாதி தினமாம் என்பதால் முதல் நாள் மாலை 3.00 மணியிலின்று அசுவதி நட்சத்திரம் எனக்கொண்டு .675 நாளைக் கூட்டி நட்சத்திரம் காணலாம்.

5. ஒவ்வொரு ஆண்டும் நாம் மேஷ ரவியை நிர்ணயிக்க .25625 நாள் அல்லது 15 நாழி 22 விநாடி 30 விகலைகள் அல்லது 6 மணி 9 நிமிடங்களைக் கூட்டி நிர்ணயிக்க வேண்டும். இன்றுள்ள நிலை

நீடித்தால் இன்னும் 60 ஆண்டுகளில் சௌரமான ரீதியில் ஒருநாள் கூடிவிடும்.

6. கி.மு. ஆண்டுகளில் 4ஆல் வகுபடும் அனைத்து ஆண்டுகளும் லீப் ஆண்டுகளாம். மற்ற வகுபடாத ஆண்டுகள் சாதாரண ஆண்டுகளாம்.

7. கி.பி. ஆண்டுகளில் 4ஆல் வகுபடும் அனைத்து ஆண்டுகளும் லீப் ஆண்டுகள்தான் என்றாலும் அது போன்ற நூற்றாண்டுகளில் 400ஆல் வகுபடாத நூற்றாண்டுகளை மட்டும் நாம் சாதாரண ஆண்டுகளின் பட்டியிலல் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

8. மேற்காணும் நியதிகளின்படிதான், நான் கி.மு. கி.பி. ஆண்டுகளில் முக்கிய தேதிகளுக்கு கூடுதல் நாட்களின்படி கிழமைகளைக் கணித்துக் கொடுத்துள்ளேன்.

9. எளிதில் கிழமை காண கி.மு. ஆண்டுகளுக்கு ஒரு கிழமைக் காட்டியையும், கி.பி.ஆண்டுகளுக்கு ஒரு கிழமைக் காட்டியையும் இத்துடன் இணைத்துள்ளேன்.

10. ஆங்கில காலண்டரில் அவர்கள் ஒரிரு முறை சில நாட்களை விட்டுவிட்டு அதற்கு உகந்தாற்போல ஒரு காலண்டரை கிழமை காண வைத்துக் கொண்டுள்ளதால் அது ஆய்வுக்கு கூடுதல் நாட்களைக் கணக்கிட சிரமம் தரும் எனக்கொண்டு, மேற்கண்ட நியதியில் கிழமைக் காட்டிகளை தனித்தனியே தயாரித்துக் கொடுத்துள்ளேன்.

11. அநேக வானநூல் வல்லுனர்கள் ஜூலியன் நாளான கி.மு.01.01.4713 என்பது வியாழக்கிழமையே என்று கூறியதால் எனது கனிப்பில் கி.மு.01.01.4713 வியாழக்கிழமைதான் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

12. கி.மு. கி.பி. ஆண்டுகளுக்குரிய கிழமைச் காட்டிகளில் 1 முதல் 4 காலங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அதில் கலம் ஒன்றின் கீழ் தேவையான ஆண்டைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, அந்த ஆண்டிற்கு நேர்வலமாக கலம் இரண்டின் கீழ் தேவையான மாதத்திற்கு நேர் கீழே குறுக்கிடும் எண்ணுடன் குறிப்பிட்ட தேதிக்குரிய எண்ணைக் கூட்டி, அக் கூடுதல் எண்ணை கலம் மூன்றின் கீழ் பார்த்து அந்த எண்ணுக்கு நேர் வலமாக கலம் நான்கின் கீழ் வருவது கிழமையாம்.



## மகாயுகம் நான்கும் அவற்றின் பிரிவுகளும்

### 27வது மகாயுகம் (பிர்மாவின் பகல்)

| கோள்கள் ரீதியாக | வேதாங்க சோதிஷப்படி |
|---|---|
| 1. கிருதயுகம்<br>கி.மு. 13.07.27425 புதன் முதல்<br>கி.மு. 11.08.22561 திங்கள் முடிய | 1. கிருதயுகம்<br>கி.மு. 29.07.27421 புதன் முதல்<br>கி.மு. 27.08.22557 திங்கள் முடிய |
| 2. திரேதாயுகம்<br>கி.மு. 12.08.22561 செவ்வாய்முதல்<br>கி.மு. 03.09.18913 சனி முடிய | 2. திரேதாயுகம்<br>கி.மு. 28.08.22557 செவ்வாய்முதல்<br>கி.மு. 19.09.18909 சனி முடிய |
| 3. துவாபரயுகம்<br>கி.மு. 04.09.19813 ஞாயிறு முதல்<br>கி.மு. 18.09.16481 செவ்வாய் முடிய | 3. துவாபரயுகம்<br>கி.மு. 20.09.18909 ஞாயிறு முதல்<br>கி.மு. 04.10.16477 செவ்வாய்முடிய |
| 4. கலியுகம்<br>கி.மு. 19.09.16481 புதன் முதல்<br>கி.மு. 26.09.15265 வியாழன் முடிய | 4. கலியுகம்<br>கி.மு. 05.10.16477 புதன் முதல்<br>கி.மு. 12.10.15261 வியாழன் முடிய |

### 28வது மகாயுகம் (பிர்மாவின் இரவு)

| | |
|---|---|
| 1. கிருதயுகம்<br>கி.மு. 27.09.15265 வெள்ளி முதல்<br>கி.மு. 26.10.10401 புதன் முடிய | 1. கிருதயுகம்<br>கி.மு. 13.10.15261 வெள்ளி முதல்<br>கி.மு. 11.11.10397 புதன் முடிய |
| 2. திரேதாயுகம்<br>கி.மு. 27.10.10401 வியாழன் முதல்<br>கி.மு. 18.11.6753 திங்கள் முடிய | 2. திரேதாயுகம்<br>கி.மு. 12.11.10397 வியாழன் முதல்<br>கி.மு. 04.12.6749 திங்கள் முடிய |
| 3. துவாபரயுகம்<br>கி.மு. 19.11.6753 செவ்வாய் முதல்<br>கி.மு. 03.12.4321 வியாழன் முடிய | 3. துவாபரயுகம்<br>கி.மு. 05.12.6749 செவ்வாய் முதல்<br>கி.மு. 19.12.4317 வியாழன் முடிய |
| 4. கலியுகம்<br>கி.மு. 04.12.4321 வெள்ளி முதல்<br>கி.மு. 11.12.3105 சனி முடிய | 4. கலியுகம்<br>கி.மு. 20.12.4317 வெள்ளி முதல்<br>கி.மு. 27.12.3101 சனி முடிய |

## 29வது மகாயுகம் (பிர்மாவின் பகல்)

| கோள்கள் ரீதியாக | வேதாங்க சோதிஷாப்படி |
|---|---|
| **1. கிருதயுகம்**<br>கி.மு. 12.12.3105 ஞாயிறு முதல்<br>கி.பி. 23.01.1761 வெள்ளி முடிய | **1. கிருதயுகம்**<br>கி.மு. 28.12.3101 ஞாயிறு முதல்<br>கி.பி. 08.02.1765 வெள்ளி முடிய |
| **2. திரேதாயுகம்**<br>கி.பி. 24.01.1761 சனி முதல்<br>கி.பி. 15.03.5409 புதன் முடிய | **2. திரேதாயுகம்**<br>கி.பி. 09.02.1765 சனி முதல்<br>கி.பி. 31.03.5413 புதன் முடிய |
| **3. துவாபரயுகம்**<br>கி.பி. 16.03.5409 வியாழன் முதல்<br>கி.பி. 17.04.7841 சனி முடிய | **3. துவாபரயுகம்**<br>கி.பி. 01.04.5413 வியாழன் முதல்<br>கி.பி. 03.05.7845 சனி முடிய |
| **4. கலியுகம்**<br>கி.பி. 18.04.7841 ஞாயிறு முதல்<br>கி.பி. 04.05.9057 திங்கள் முடிய | **4. கலியுகம்**<br>கி.பி. 04.05.7845 ஞாயிறு முதல்<br>கி.பி. 20.05.9061 திங்கள் முடிய |

## 30வது மகாயுகம் (பிர்மாவின் இரவு)

| | |
|---|---|
| **1. கிருதயுகம்**<br>கி.பி. 05.05.9057 செவ்வாய் முதல்<br>கி.பி. 10.07.13921 ஞாயிறு முடிய | **1. கிருதயுகம்**<br>கி.பி. 21.05.9061 செவ்வாய் முதல்<br>கி.பி. 26.07.13925 ஞாயிறு முடிய |
| **2. திரேதாயுகம்**<br>கி.பி. 11.07.13921 திங்கள் முதல்<br>கி.பி. 29.08.17569 வெள்ளி முடிய | **2. திரேதாயுகம்**<br>கி.பி. 27.07.13925 திங்கள் முதல்<br>கி.பி. 14.09.17573 வெள்ளி முடிய |
| **3. துவாபரயுகம்**<br>கி.பி. 30.08.17569 சனி முதல்<br>கி.பி. 01.10.20001 திங்கள் முடிய | **3. துவாபரயுகம்**<br>கி.பி. 15.09.17573 சனி முதல்<br>கி.பி. 17.10.20005 திங்கள் முடிய |
| **4. கலியுகம்**<br>கி.பி. 02.10.20001 செவ்வாய் முதல்<br>கி.பி. 19.10.21217 புதன் முடிய | **4. கலியுகம்**<br>கி.பி. 18.10.20005 செவ்வாய் முதல்<br>கி.பி. 03.11.21221 புதன் முடிய |



## முக்கிய சம்பவங்களும் அவற்றின் தேதிகளும்

| வ. எண். | சம்பவங்களின் விபரம் | ஆங்கில நாள் | கிழமை | கி.மு. 13.10.15261 வெள்ளி முதல் கூடுதல் நாட்கள் |
|---|---|---|---|---|
| | **28வது மகாயுகம் (பிர்மாவின் இரவு)** | | | |
| 1. | கிருதயுகம் சப்தரிஷி ஆண்டு தொடக்கம் | கி.மு. 13.10.15261 | வெ | 1 |
| 2. | திரேதாயுகம் ஆரம்பம் | கி.மு. 12.11.10397 | வி | 1776607 |
| 3. | ஸ்ரீராமன் ஜனனம் | கி.மு. 17.01.10205 | தி | 1846436 |
| 4. | இராவண வதம் | கி.மு. 08.01.10167 | வெ | 1860307 |
| 5. | ஸ்ரீராமர் பட்டாபிஷேகம் | கி.மு. 15.01.10167 | வெ | 1860314 |
| 6. | துவாபரயுகம் ஆரம்பம் | கி.மு. 05.12.6749 | செ | 3109062 |
| 7. | ஜூலியன் நாள் | கி.மு. 01.01.4713 | வி | 3852373 |
| 8. | கலியுகம் ஆரம்பம் | கி.மு. 20.12.4317 | வெ | 3997365 |
| 9. | திருமழிசையாழ்வார்ஜனனம் | கி.மு. 16.12.4203 | வி | 4039000 |
| 10. | பொய்கையாழ்வார் ஜனனம் | கி.மு. 30.08.4202 | செ | 4039257 |
| 11. | பூதத்தாழ்வார் ஜனனம் | கி.மு. 31.08.4202 | பு | 4039258 |
| 12. | பேயாழ்வார் ஜனனம் | கி.மு. 01.09.4202 | வி | 4039259 |
| 13. | மதுரகவியாழ்வார் ஜனனம் | கி.மு. 19.03.3223 | வெ | 4396673 |
| 14. | ஸ்ரீகிருஷ்ணன் ஜனனம் | கி.மு. 23.07.3185 | பு | 4410678 |
| 15. | ராஜசூயா யாகம் | கி.மு. 25.10.3155 | செ | 4421730 |
| 16. | மகாபாரதப்போர் தொடக்கம் | கி.மு. 29.10.3139 | வெ | 4427578 |
| 17. | பீஷ்மர் அம்பால் அடிபடல் | கி.மு. 07.11.3139 | ஞா | 4427587 |
| 18. | மகாபாரதப்போர் முடிவு | கி.மு. 15.11.3139 | தி | 4427595 |
| 19. | யுதிஷ்டிரார் முடிசூட்டுவிழா | கி.மு. 27.12.3139 | தி | 4427637 |
| 20. | ரத சப்தமி | கி.மு. 02.01.3138 | ஞா | 4427643 |
| 21. | பீஷ்மாஷ்டமி | கி.மு. 03.01.3138 | தி | 4427644 |
| 22. | கோள்கள் ரீதியாக கலியுகம் முடிவு | கி.மு. 11.12.3105 | ச | 4440039 |
| 23. | கோள்கள் ரீதியாக கிருதயுகம் ஆரம்பம் | கி.மு. 12.12.3105 | ஞா | 4440040 |
| 24. | ஸ்ரீகிருஷ்ணன் பரமபதம் | கி.மு. 06.02.3101 | வி | 4441192 |
| 25. | ஜெயபாரத யுதிஷ்ட்ராசகா ஆரம்பம் | கி.மு. 06.02.3101 | வி | 4441192 |
| 26. | பஞ்சாங்க கலியுகம் தொடக்கம் | கி.மு. 25.02.3101 | செ | 4441211 |
| 27. | நம்மாழ்வார் ஜனனம் | கி.மு. 21.03.3101 | வெ | 4441235 |
| 28. | கலியுகம் முடிவு | கி.மு. 27.12.3101 | ச | 4441516 |

## 29வது மகாயுகம் (பிர்மாவின் பகல்)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கிருதயுகம் ஆரம்பம் | கி.மு. 28.12.3101 | ஞா | 4441517 |
| 2. | குலசேகர ஆழ்வார் ஜனனம் | கி.மு. 18.01.3074 | வெ | 4451034 |
| 3. | பெரியாழ்வார் ஜனனம் | கி.மு. 16.05.3055 | ஞா | 4458093 |
| 4. | ஸ்ரீ ஆண்டாள் ஜனனம் | கி.மு. 23.06.3005 | செ | 4476393 |
| 5. | தொண்டரடிப் பொடியாழ்வார் ஜனனம் | கி.மு. 22.11.2813 | செ | 4446673 |
| 6. | திருப்பாணாழ்வார் ஜனனம் | கி.மு. 24.09.2760 | பு | 4565973 |
| 7. | திருமங்கையாழ்வார் ஜனனம் | கி.மு. 04.10.2704 | ச | 4586437 |
| 8. | ஜைனயுதிஷ்ட்ராசகா தொடக்கம் | கி.மு. 30.12.2634 | வெ | 4612091 |
| 9. | கௌதம புத்தர் ஜனனம் | கி.மு. 09.04.544 | தி | 5375199 |
| 10. | ஆதிசங்கரர் ஜனனம் | கி.மு. 02.04.509 | செ | 5387975 |
| 11. | ஆதிசங்கரர் முக்தி | கி.மு. 14.04.477 | வெ | 5399675 |
| 12. | விக்ரமசகா தொடக்கம் | கி.மு. 12.03.57 | ஞா | 5553047 |
| 13. | இயேசுநாதர் ஜனனம் | கி.மு. 25.12.04 | வெ | 5572694 |
| 14. | கி.மு. ஆண்டு ஆரம்பம் | கி.மு. 31.12.01 | ஞா | 5573795 |
| 15. | கி.பி. ஆண்டு ஆரம்பம் | கி.பி. 01.01.01 | தி | 5573796 |
| 16. | சாலிவாகன சகா ஆரம்பம் | கி.பி. 19.02.79 | ஞா | 5602334 |
| 17. | நபிகள் நாயகம் ஜனனம் | கி.பி. 07.05.570 | தி | 5781745 |
| 18. | நாதமுனிகள் ஜனனம் | கி.பி. 11.06.583 | பு | 5786528 |
| 19. | ஹிஜ்ரா சகாப்தத்தொடக்கம் | கி.பி. 19.07.622 | வெ | 5800810 |
| 20. | பரமேஸ்வர வர்மன் செப்பேடு | கி.பி. 13.01.689 | ஞா | 5825095 |
| 21. | ஸ்ரீராமானுஜர் ஜனனம் | கி.பி. 11.04.1017 | வெ | 5944982 |
| 22. | அம்பிகாபுரம் கல்வெட்டு | கி.பி. 24.07.1111 | தி | 5979418 |
| 23. | ஸ்ரீகுமரகுருபரர் ஜனனம் | கி.பி. 04.07.1625 | வெ | 6167134 |
| 24. | கிருதயுகம் முடிவு | கி.பி. 08.02.1765 | வெ | 6218122 |
| 25. | திரேதாயுகம் ஆரம்பம் | கி.பி. 09.02.1765 | ச | 6218123 |
| 26. | பல்குன அமாவாசை | கி.பி. 10.04.1994 | ஞா | 6301823 |
| 27. | 17528வது சப்தரிஷி ஆண்டு முடிவு | கி.பி. 12.02.1999 | வெ | 6303592 |
| 28. | 12204வது ஸ்ரீராம ஜெயந்தி | கி.பி. 25.03.1999 | வி | 6303633 |
| 29. | 5184வது ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி | கி.பி. 02.09.1999 | வி | 6303794 |
| 30. | விக்ரம ஆண்டு மேஷ சித்திரை 1 | கி.பி. 13.04.2000 | வி | 6304018 |
| 31. | திரேதாயுகம் முடிவு | கி.பி. 31.03.5413 | பு | 7550577 |
| 32. | 29வது மகாயுகம் முடிவு | கி.பி. 20.05.9061 | தி | 8883032 |



## வேதகால வானியல் குறித்த அளவுகள் விவரம்

### மாக சைக்கிள்

| | | | |
|---|---|---|---|
| அ. | 160 சௌரமான ஆண்டுகள் | 58441 | நாட்கள் |
| ஆ. | 1979 சாந்திரமான மாதங்கள் | 58441 | நாட்கள் |
| இ. | 2139 நட்சத்திர மாதங்கள் | 58441 | நாட்கள் |
| ஈ. | 2299 யோகா சைக்கிள்கள் | 58441 | நாட்கள் |

### மகாயுகம்

| | | | |
|---|---|---|---|
| அ. | 12160 சௌரமான ஆண்டுகள் | 4441516 | நாட்கள் |
| ஆ. | 150404 சாந்திரமான மாதங்கள் | 4441516 | நாட்கள் |
| இ. | 162564 நட்சத்திர மாதங்கள் | 4441516 | நாட்கள் |
| ஈ. | 174724 யோகா சைக்கிள்கள் | 4441516 | நாட்கள் |

குறிப்பு :– அ+ஆ=இ; அ+இ (அல்லது) 2அ+ஆ=ஈ

### யுகங்கள் நான்கும் அவற்றின் நாட்களும்

| | | | |
|---|---|---|---|
| 1. | கிருதயுகம் | 1776606 | நாட்கள் |
| 2. | திரேதாயுகம் | 1332455 | நாட்கள் |
| 3. | துவாபரயுகம் | 888303 | நாட்கள் |
| 4. | கலியுகம் | 444152 | நாட்கள் |
| | ஆக | 4441516 | நாட்கள் |

### தமிழ் மாதங்களும் அவற்றின் நாட்களும்

| வ. எண். | மாதங்களின் பெயர் | மாதத்திற்குரிய நாட்கள் | முடியவுள்ள கூடுதல் நாட்கள் |
|---|---|---|---|
| 1. | மேஷ – சித்திரை | 30.92530 | 30.92530 |
| 2. | ரிஷப – வைகாசி | 31.40334 | 62.32864 |
| 3. | மிதுன – ஆனி | 31.61585 | 93.94449 |
| 4. | கடக – ஆடி | 31.46445 | 125.40894 |
| 5. | சிம்ம – ஆவணி | 31.03585 | 156.44479 |
| 6. | கன்னி – புரட்டாசி | 30.45585 | 186.90064 |
| 7. | துலா – ஐப்பசி | 29.90168 | 216.80232 |
| 8. | விருச்சிக – கார்த்திகை | 29.50668 | 246.30900 |
| 9. | தனுசு – மார்கழி | 29.34780 | 275.65680 |
| 10. | மகர – தை | 29.45418 | 305.11098 |
| 11. | கும்ப – மாசி | 29.80640 | 334.91738 |
| 12. | மீன – பங்குனி | 30.33887 | 365.25625 |

## கோள்களும் ஒரு மகாயுகத்தில் சூரியனை ஒரு முறைச் சுற்ற எடுத்துக்கொள்ளும் நாட்களும், சுற்றுகளின் எண்ணிக்கையும்

| தொடர் எண். | கோள்களின் பெயர் | ஒரு சுற்றுக்குரிய | | சுற்றுகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| | | நாட்கள் | ஆண்டுகள் | |
| 1. | புளூட்டோ. | 90643.1836734 | 248.163265 | 49 |
| 2. | நெப்டியூன் | 60020.4864864 | 164.324324 | 74 |
| 3. | யுரேனஸ் | 30631.1448227 | 83.862069 | 145 |
| 4. | சனி | 10754.276029 | 29.443099 | 413 |
| 5. | ராகு | 6791.3088685 | 18.593272 | 654 |
| 6. | குரு | 4333.18634146 | 11.863415 | 1025 |
| 7. | செவ்வாய் | 687.00943542 | 1.880897 | 6465 |
| 8. | பூமி | 365.25625 | 1.00 | 12160 |
| 9. | சுக்கிரன் | 224.773076923 | 0.6153 | 19760 |
| 10. | புதன் | 87.9682313329 | 0.2408 | 50490 |
| 11. | சந்திரன் | 27.3216456287 | 0.0748 | 162564 |
| 12. | தூமகேது (ஹாலே வால் நட்சத்திரம்) | 27934.062893 | 76.477987 is it right? | 159 |

## நட்சத்திரங்களின் பெயர்கள்

| | | |
|---|---|---|
| 1. அசுவதி | 10. மகம் | 19. மூலம் |
| 2. பரணி | 11. பூரம் | 20. பூராடம் |
| 3. கார்த்திகை | 12. உத்திரம் | 21. உத்திராடம் |
| 4. ரோகிணி | 13. அஸ்த்தம் | 22. திருவோணம் |
| 5. மிருகசீரிஷம் | 14. சித்திரை | 23. அவிட்டம் |
| 6. திருவாதிரை | 15. சுவாதி | 24. சதயம் |
| 7. புனர்பூசம் | 16. விசாகம் | 25. பூரட்டாதி |
| 8. பூசம் | 17. அனுஷம் | 26. உத்திரட்டாதி |
| 9. ஆயில்யம் | 18. கேட்டை | 27. ரேவதி |





| | |
|---|---|
| 12 சாந்திரமான மாதங்கள் (அல்லது ஒரு கூடுதல் மாதத்துடன்) 13 சாந்திரமான மாதங்கள் | 1 சாந்திரமான ஆண்டு |
| 5 சாந்திரமான ஆண்டுகள் | 1 வேதாங்க சோதிஷா யுகா |
| 32 வேதாங்க சோதிஷா யுகாக்கள் | 1 மாக சைக்கிள் (160 ஆண்டுகள்) |
| 76 மாக சைக்கிள்கள் | 1 மகாயுகம் (12160 ஆண்டுகள்) |
| 1 மகாயுகம் | பிர்மாவின் பகல் |
| 1 மகாயுகம் | பிர்மாவின் இரவு |
| 2 மகாயுகங்கள் | பிர்மாவின் ஒரு நாள் (24320 ஆண்டுகள்) |
| 72 மகாயுகங்கள் | 1 மன்வந்தரம் |
| 14 மன்வந்தரங்கள் | 1 கல்பம் (1008 மகாயுகங்கள்) |
| 6 கல்பங்கள் | 1 பிரளயம் |
| 3 பிரளயங்கள் | 1 மகா பிரளயம் |
| 27 மகா பிரளயங்கள் | பிர்மாவின் வயதாம் (5957038080 ஆண்டுகள்) |

## நான் எடுத்துக்கொண்ட அளவுகள்

| | |
|---|---|
| 1 சௌரமான ஆண்டு | 365.25625 நாட்கள் |
| 1 சாந்திரமான மாதம் (சுக்ல பிரதமை முதல் அமாவாசை முடிய) | 29.5305709954 நாட்கள் |
| 1 நட்சத்திர மாதம் (அசுவதி முதல் ரேவதி முடிய) | 27.3216456287 நாட்கள் |
| 27 யோகங்கள் | 25.4201826881 நாட்கள் |

## திதிகளும் - பக்ஷமும்

| சுக்ல பக்ஷம் | பகுள பக்ஷம் |
|---|---|
| 1. பிரதமை | 1. பிரதமை |
| 2. துவிதியை | 2. துவிதியை |
| 3. திருதியை | 3. திருதியை |
| 4. சதுர்த்தி | 4. சதுர்த்தி |
| 5. பஞ்சமி | 5. பஞ்சமி |
| 6. சஷ்டி | 6. சஷ்டி |
| 7. சப்தமி | 7. சப்தமி |
| 8. அஷ்டமி | 8. அஷ்டமி |
| 9. நவமி | 9. நவமி |
| 10. தசமி | 10. தசமி |
| 11. ஏகாதசி | 11. ஏகாதசி |
| 12. தூவாதசி | 12. தூவாதசி |
| 13. திரயோதசி | 13. திரயோதசி |
| 14. சதுர்த்தசி | 14. சதுர்த்தசி |
| 15. பௌர்ணமி | 15. அமாவாசை |

## சாந்திரமான மாதங்களும் - ருதுவும்

| மாதங்கள் | ருது |
|---|---|
| 1. சைத்ரம்<br>2. வைசாகம் | 1. வஸந்தருது |
| 3. ஜ்யேஷ்டம்<br>4. ஆஷாடம் | 2. கிரீஷ்மருது |
| 5. சிராவணம்<br>6. பாத்ரபதம் | 3. வருஷருது |
| 7. அஸ்வீனம்<br>8. கார்த்தீயம் | 4. சரத்ருது |
| 9. மார்க்கசீரிஷம்<br>10. பௌஷம் | 5. ஹேமந்தருது |
| 11. மாகம்<br>12. பல்குனம் | 6. சசிரருது |



## அயனாம்ச அளவுகள் (PRECESSION OF EQUINOXES)

| | | |
|---|---|---|
| 1 ஆண்டில் | 53.2894736842" | |
| 1 டிகிரிக்கு | 67.5555555555 ஆண்டுகள் | |
| $13\frac{1}{3}$" | 900.740740737 | " |
| 30" | 2026.66666666 | " |
| 180" | 12160 | " |
| 360" | 24320 | " |

## தமிழ் ஆண்டுகளின் பெயர்

| | | | |
|---|---|---|---|
| 1. பிரபவ | 16. சித்ரபானு | 31. ஏவிளம்பி | 46. பரிதாபி |
| 2. விபவ | 17. சுபானு | 32. விகாரி | 47. பிராமதீச |
| 3. சுக்ல | 18. தாரண | 33. சார்வரி | 48. ஆனந்த |
| 4. பிரமோதூத | 19. பார்த்திப | 34. பிலவ | 49. ராக்ஷஸ |
| 5. பிரஜோத்பத்தி | 20. விய | 35. பிலவ | 50. நள |
| 6. ஆங்கீரஸ | 21. சர்வஜித்து | 36. சுபகிருது | 51. பிங்கள |
| 7. ஸ்ரீமுக | 22. சர்வதாரி | 37. சோபகிருது | 52. காளயுக்தி |
| 8. பவ | 23. விரோதி | 38. குரோதி | 53. சித்தார்த்தி |
| 9. யுவ | 24. விக்குருதி | 39. விசுவாவசு | 54. ரௌத்ரி |
| 10. தாது | 25. கர | 40. பராபவ | 55. துன்மதி |
| 11. ஈஸ்வர | 26. நந்தன | 41. பிலவங்க | 56. துந்துபி |
| 12. வெகுதான்ய | 27. விஜய | 42. கீலக | 57. ருத்ரோத்காரி |
| 13. பிரமாதி | 28. ஜய | 43. சௌமிய | 58. ரக்தாக்ஷி |
| 14. விக்ரம | 29. மன்மத | 44. சாதாரண | 59. குரோதன |
| 15. விஷு | 30. துர்முகி | 45. விரோதிகிருது | 60. அக்ஷய |

## ஆய்வுக்குரிய சில குறிப்புகள்

| | |
|---|---|
| கி.மு. 11.12.15295 திங்கள் முதல்<br>கி.மு. 12.10.15261 வியாழன் முடிய | 12359 நாட்கள் |
| கி.மு. 27.09.15265 வெள்ளி முதல்<br>கி.மு. 12.10.15261 வியாழன் முடிய | 1477 நாட்கள் |
| கி.மு. 03.10.15265 வியாழன் முதல்<br>கி.மு. 12.10.15261 வியாழன் முடிய | 1471 நாட்கள் |

## கி. மு. ஆண்டிற்கோர்

உலகினிலே இயேசுவவர் பிறந்ததின விழாவை யொட்டி
நலமாகத் தேதி யொன்றின் கிழமைதனை நமக்குக் காண

1

**ஆண்டுகள்**

(ஜனவரி) (பிப்ரவரி) லீப் ஆண்டுகளுக்கு மட்டும்

| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 29 | 57 | 85 | 113 | 141 | 169 | 197 | 225 | 253 | 281 | 309 | 337 | 365 | 393 | 421 | 449 | 477 | 505 | 533 | 561 | 589 | 617 | 645 | 673 |
| 7 | 35 | 63 | 91 | 119 | 147 | 175 | 203 | 231 | 259 | 287 | 315 | 343 | 371 | 399 | 427 | 455 | 483 | 511 | 539 | 567 | 595 | 623 | 651 | 679 |
| 18 | 46 | 74 | 102 | 130 | 158 | 186 | 214 | 242 | 270 | 298 | 326 | 354 | 382 | 410 | 438 | 466 | 494 | 522 | 550 | 578 | 606 | 634 | 662 | 690 |
| 24 | 52 | 80 | 108 | 136 | 164 | 192 | 220 | 248 | 276 | 304 | 332 | 360 | 388 | 416 | 444 | 472 | 500 | 528 | 556 | 584 | 612 | 640 | 668 | 696 |
| 2 | 30 | 58 | 86 | 114 | 142 | 170 | 198 | 226 | 254 | 282 | 310 | 338 | 366 | 394 | 422 | 450 | 478 | 506 | 534 | 562 | 590 | 618 | 646 | 674 |
| 8 | 36 | 64 | 92 | 120 | 148 | 176 | 204 | 232 | 260 | 288 | 316 | 344 | 372 | 400 | 428 | 456 | 484 | 512 | 540 | 568 | 596 | 624 | 652 | 680 |
| 13 | 41 | 69 | 97 | 125 | 153 | 181 | 209 | 237 | 265 | 293 | 321 | 349 | 377 | 405 | 433 | 461 | 489 | 517 | 545 | 573 | 601 | 629 | 657 | 685 |
| 19 | 47 | 75 | 103 | 131 | 159 | 187 | 215 | 243 | 271 | 299 | 327 | 355 | 383 | 411 | 439 | 467 | 495 | 523 | 551 | 579 | 607 | 635 | 663 | 691 |
| 3 | 31 | 59 | 87 | 115 | 143 | 171 | 199 | 227 | 255 | 283 | 311 | 339 | 367 | 395 | 423 | 451 | 479 | 507 | 535 | 563 | 591 | 619 | 647 | 675 |
| 14 | 42 | 70 | 98 | 126 | 154 | 182 | 210 | 238 | 266 | 294 | 322 | 350 | 378 | 406 | 434 | 462 | 490 | 518 | 546 | 574 | 602 | 630 | 658 | 686 |
| 20 | 48 | 76 | 104 | 132 | 160 | 188 | 216 | 244 | 272 | 300 | 328 | 356 | 384 | 412 | 440 | 468 | 496 | 524 | 552 | 580 | 608 | 636 | 664 | 692 |
| 25 | 53 | 81 | 109 | 137 | 165 | 193 | 221 | 249 | 277 | 305 | 333 | 361 | 389 | 417 | 445 | 473 | 501 | 529 | 557 | 585 | 613 | 641 | 669 | 697 |
| 4 | 32 | 60 | 88 | 116 | 144 | 172 | 200 | 228 | 256 | 284 | 312 | 340 | 368 | 396 | 424 | 452 | 480 | 508 | 536 | 564 | 592 | 620 | 648 | 676 |
| 9 | 37 | 65 | 93 | 121 | 149 | 177 | 205 | 233 | 261 | 289 | 317 | 345 | 373 | 401 | 429 | 557 | 455 | 513 | 541 | 569 | 597 | 625 | 653 | 681 |
| 15 | 43 | 71 | 99 | 127 | 155 | 183 | 211 | 239 | 267 | 295 | 323 | 351 | 379 | 407 | 435 | 463 | 491 | 519 | 547 | 575 | 603 | 631 | 659 | 687 |
| 26 | 54 | 82 | 110 | 138 | 166 | 194 | 222 | 250 | 278 | 306 | 334 | 362 | 390 | 418 | 446 | 474 | 502 | 530 | 558 | 586 | 614 | 642 | 670 | 698 |
| 6 | 34 | 62 | 90 | 118 | 146 | 174 | 202 | 230 | 258 | 286 | 314 | 342 | 370 | 398 | 426 | 454 | 482 | 510 | 538 | 566 | 594 | 622 | 650 | 678 |
| 12 | 40 | 68 | 96 | 124 | 152 | 180 | 208 | 236 | 264 | 292 | 320 | 348 | 376 | 404 | 432 | 460 | 488 | 516 | 544 | 572 | 600 | 628 | 656 | 684 |
| 17 | 45 | 73 | 101 | 129 | 157 | 185 | 213 | 241 | 269 | 297 | 325 | 353 | 381 | 409 | 437 | 465 | 493 | 521 | 549 | 577 | 605 | 633 | 661 | 689 |
| 23 | 51 | 79 | 107 | 135 | 163 | 191 | 219 | 247 | 275 | 303 | 331 | 359 | 387 | 415 | 443 | 471 | 499 | 527 | 555 | 583 | 611 | 639 | 667 | 695 |
| 10 | 38 | 66 | 94 | 122 | 150 | 178 | 206 | 234 | 262 | 290 | 318 | 346 | 374 | 402 | 430 | 458 | 486 | 514 | 542 | 570 | 598 | 626 | 654 | 682 |
| 16 | 44 | 72 | 100 | 128 | 156 | 184 | 212 | 240 | 268 | 296 | 324 | 352 | 380 | 408 | 436 | 464 | 492 | 520 | 548 | 576 | 604 | 632 | 660 | 688 |
| 21 | 49 | 77 | 105 | 133 | 161 | 189 | 217 | 245 | 273 | 301 | 329 | 357 | 385 | 413 | 441 | 469 | 497 | 525 | 553 | 581 | 609 | 637 | 665 | 693 |
| 27 | 55 | 83 | 111 | 139 | 167 | 195 | 223 | 251 | 279 | 307 | 335 | 363 | 391 | 419 | 447 | 475 | 503 | 531 | 559 | 587 | 615 | 643 | 671 | 699 |
| 5 | 33 | 61 | 89 | 117 | 145 | 173 | 201 | 229 | 257 | 285 | 313 | 341 | 369 | 397 | 425 | 453 | 481 | 509 | 537 | 565 | 593 | 621 | 649 | 677 |
| 11 | 39 | 67 | 95 | 123 | 151 | 179 | 207 | 235 | 263 | 291 | 319 | 347 | 375 | 403 | 431 | 459 | 487 | 515 | 543 | 571 | 599 | 627 | 655 | 683 |
| 22 | 50 | 78 | 106 | 134 | 162 | 190 | 218 | 246 | 274 | 302 | 330 | 358 | 386 | 414 | 442 | 470 | 498 | 526 | 554 | 582 | 610 | 638 | 666 | 694 |
| 28 | 56 | 84 | 112 | 140 | 168 | 196 | 224 | 252 | 280 | 308 | 336 | 364 | 392 | 420 | 448 | 476 | 504 | 532 | 560 | 588 | 616 | 644 | 672 | 700 |

குறிப்பு : தேவையான ஆண்டை 700ஆல் வகுத்து எஞ்சியதை ஆண்டெனக் கொள்க.



## கிழமைக் காட்டி

உதித்திட்டக் கி.பி. ஒன் றாண்டின் முன் எந்த ஆண்டும்
நல்கிட்டான் ராமதுரை இம் முறையைக் காண வாரீர் !

| 2 | | | | | | | 3 | | | | | | 4 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாதங்கள் | | | | | | | எண்கள் | | | | | | கிழமைகள் |
| ஜனவரி அக்டோபர் | மே | ஆகஸ்ட் (பிப்ரவரி) | பிப்ரவரி மார்ச் நவம்பர் | ஜூன் | செப்டம்பர் டிசம்பர் | ஏப்ரல் ஜூலை (ஜனவரி) | | | | | | | |
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 1 | 8 | 15 | 22 | 29 | 36 | ஞாயிறு |
| 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 2 | 9 | 16 | 23 | 30 | 37 | திங்கள் |
| 5 | 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 3 | 10 | 17 | 24 | 31 | - | செவ்வாய் |
| 4 | 5 | 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 11 | 18 | 25 | 32 | - | புதன் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 0 | 5 | 12 | 19 | 26 | 33 | - | வியாழன் |
| 3 | 4 | 5 | 6 | 0 | 1 | 2 | 6 | 13 | 20 | 27 | 34 | - | வெள்ளி |
| 2 | 3 | 4 | 5 | 6 | 0 | 1 | 7 | 14 | 21 | 28 | 35 | - | சனி |

4ஆல் வகுபடும் அனைத்து ஆண்டுகளும் லீப் ஆண்டுகளாம். மற்றவை சதாரண ஆண்டுகளாம்

## கி. பி. ஆண்டிற்கோர்

உலகினிலே இயேசுவவர் பிறந்ததின விழாவை யொட்டி
நலமாகத் தேதி யொன்றின் கிழமைதனை நமக்குக் காண

1

ஆண்டுகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 29 | 57 | 85 | 108 | 136 | 164 | 192 | 221 | 249 | 277 | 300 | 328 | 356 | 384 |
| 7 | 35 | 63 | 91 | 114 | 142 | 170 | 198 | 227 | 255 | 283 | 306 | 334 | 362 | 390 |
| 12 | 40 | 68 | 96 | 125 | 153 | 181 | 204 | 232 | 260 | 288 | 317 | 345 | 373 | - |
| 18 | 46 | 74 | 103 | 131 | 159 | 187 | 210 | 238 | 266 | 294 | 323 | 351 | 379 | - |
| 2 | 30 | 58 | 86 | 120 | 148 | 176 | 205 | 233 | 261 | 289 | 312 | 340 | 368 | 396 |
| 13 | 41 | 69 | 97 | 126 | 154 | 182 | 211 | 239 | 267 | 295 | 318 | 346 | 374 | - |
| 19 | 47 | 75 | 109 | 137 | 165 | 193 | 216 | 244 | 272 | 301 | 329 | 357 | 385 | - |
| 24 | 52 | 80 | 115 | 143 | 171 | 199 | 222 | 250 | 278 | 307 | 335 | 363 | 391 | - |
| 3 | 31 | 59 | 87 | 110 | 138 | 166 | 194 | 223 | 251 | 279 | 313 | 341 | 369 | 397 |
| 8 | 36 | 64 | 92 | 121 | 149 | 177 | 200 | 228 | 256 | 284 | 319 | 347 | 375 | - |
| 14 | 42 | 70 | 98 | 127 | 155 | 183 | 206 | 234 | 262 | 290 | 324 | 352 | 380 | - |
| 25 | 53 | 81 | 104 | 132 | 160 | 188 | 217 | 245 | 273 | 302 | 330 | 358 | 386 | - |
| 9 | 37 | 65 | 93 | 116 | 144 | 172 | 201 | 229 | 257 | 285 | 308 | 336 | 364 | 392 |
| 15 | 43 | 71 | 99 | 122 | 150 | 178 | 207 | 235 | 263 | 291 | 314 | 342 | 370 | 398 |
| 20 | 48 | 76 | 105 | 133 | 161 | 189 | 212 | 240 | 268 | 296 | 325 | 353 | 381 | - |
| 26 | 54 | 82 | 111 | 139 | 167 | 195 | 218 | 246 | 274 | 303 | 331 | 359 | 387 | - |
| 4 | 32 | 60 | 88 | 117 | 145 | 173 | 202 | 230 | 258 | 286 | 320 | 348 | 376 | - |
| 10 | 38 | 66 | 94 | 123 | 151 | 179 | 213 | 241 | 269 | 297 | 326 | 354 | 382 | - |
| 21 | 49 | 77 | 100 | 128 | 156 | 184 | 219 | 247 | 275 | 309 | 337 | 365 | 393 | - |
| 27 | 55 | 83 | 106 | 134 | 162 | 190 | 224 | 252 | 280 | 315 | 343 | 371 | 399 | - |
| 5 | 33 | 61 | 89 | 112 | 140 | 168 | 196 | 225 | 253 | 281 | 304 | 332 | 360 | 388 |
| 11 | 39 | 67 | 95 | 118 | 146 | 174 | 203 | 231 | 259 | 287 | 310 | 338 | 366 | 394 |
| 16 | 44 | 72 | 101 | 129 | 157 | 185 | 208 | 236 | 264 | 292 | 321 | 349 | 377 | - |
| 22 | 50 | 78 | 107 | 135 | 163 | 191 | 214 | 242 | 270 | 298 | 327 | 355 | 383 | - |
| 6 | 34 | 62 | 90 | 124 | 152 | 180 | 215 | 243 | 271 | 299 | 322 | 350 | 378 | - |
| 17 | 45 | 73 | 102 | 130 | 158 | 186 | 220 | 248 | 276 | 305 | 333 | 361 | 389 | - |
| 23 | 51 | 79 | 113 | 141 | 169 | 197 | 226 | 254 | 282 | 311 | 339 | 367 | 395 | - |
| 28 | 56 | 84 | 119 | 147 | 175 | 209 | 237 | 265 | 293 | 316 | 344 | 372 | 400 | - |

குறிப்பு :— தேவையான ஆண்டை 400ஆல் வகுத்து எஞ்சியதை ஆண்டெனக் கொள்க.
400ஆல் சரியாக வகுபடுமானால் 400ஐயே ஆண்டெனக் கொள்க.



## கிழமைக் காட்டி

உதித்திட்டக் கி.மு. ஒன் றாண்டின் முன் எந்த ஆண்டும்
நல்கிட்டான் ராமதுரை இம் முறையைக் காண வாரீர் !

| 2 | | | | | | | 3 | | | | | | 4 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாதங்கள் | | | | | | | எண்கள் | | | | | | கிழமைகள் |
| ஜனவரி அக் டோபர் | மே | ஆகஸ்ட் (பிப் ரவரி) | பிப்ரவரி மார்ச் நவம்பர் | ஜூன் | செப் டம்பர் டிசம்பர் | ஏப்ரல் ஜூலை (ஜனவரி) | | | | | | | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 0 | 1 | 8 | 15 | 22 | 29 | 36 | ஞாயிறு |
| 2 | 3 | 4 | 5 | 6 | 0 | 1 | 2 | 9 | 16 | 23 | 30 | 37 | திங்கள் |
| 3 | 4 | 5 | 6 | 0 | 1 | 2 | 3 | 10 | 17 | 24 | 31 | - | செவ்வாய் |
| 4 | 5 | 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 11 | 18 | 25 | 32 | - | புதன் |
| 5 | 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 12 | 19 | 26 | 33 | - | வியாழன் |
| 6 | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 13 | 20 | 27 | 34 | - | வெள்ளி |
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 14 | 21 | 28 | 35 | - | சனி |

4ஆல் வகுபடும் அனைத்து ஆண்டுகளும் லீப் ஆண்டுகளாம். ஆனால் 400ஆல் வகுபடாத நூற்றாண்டுகள் சதாரண ஆண்டுகளாம். (ஜனவரி) (பிப்ரவரி) லீப் ஆண்டுகளுக்கு மட்டும்

| வ ★<br>எ பெயர் | 1<br>81-1 | 2<br>81-1 | 3<br>81-1 | 4<br>81-1 | 5<br>81-1 | 6<br>81-1 | 7<br>81-1 | 8<br>81-1 | 9<br>81-1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 27 ரேவதி | 16643-16563<br>BC | 14456-14376 | 12269-12189 | 10082-10002 | 7895-7815 | 5708-5628 | 3521-3441 | 1334-1254 | 854-934 |
| 26 உத்திரட்டாதி | 16562-16482 | 14375-14295 | 12188-12108 | 10001-9921 | 7814-7734 | 5627-5547 | 3440-3360 | 1253-1173 | 935-1015 |
| 25 பூரட்டாதி | 16481-16401 | 14294-14214 | 12107-12027 | 9920-9840 | 7733-7653 | 5546-5466 | 3359-3279 | 1172-1092 | 1016-1096 |
| 24 சதயம் | 16400-16320 | 14213-14133 | 12026-11946 | 9839-9759 | 7652-7572 | 5465-5385 | 3278-3198 | 1091-1011 | 1097-1177 |
| 23 அவிட்டம் | 16319-16239 | 14132-14052 | 11945-11865 | 9758-9678 | 7571-7491 | 5384-5304 | 3197-3117 | 1010-930 | 1178-1258 |
| 22 திருவோணம் | 16238-16158 | 14051-13971 | 11864-11784 | 9677-9597 | 7490-7410 | 5303-5223 | 3116-3036 | 929-849 | 1259-1339 |
| 21 உத்திராடம் | 16157-16077 | 13970-13890 | 11783-11703 | 9596-9516 | 7409-7329 | 5222-5142 | 3035-2955 | 848-768 | 1340-1420 |
| 20 பூராடம் | 16076-15996 | 13889-13809 | 11702-11622 | 9515-9435 | 7328-7248 | 5141-5061 | 2954-2874 | 767-687 | 1421-1501 |
| 19 மூலம் | 15995-15915 | 13808-13728 | 11621-11541 | 9434-9354 | 7247-7167 | 5060-4980 | 2873-2793 | 686-606 | 1502-1582 |
| 18 கேட்டை | 15914-15834 | 13727-13647 | 11540-11460 | 9353-9273 | 7166-7086 | 4979-4899 | 2792-2712 | 605-525 | 1583-1663 |
| 17 அனுஷம் | 15833-15753 | 13646-13566 | 11459-11379 | 9272-9192 | 7085-7005 | 4898-4818 | 2711-2631 | 524-444 | 1664-1744 |
| 16 விசாகம் | 15752-15672 | 13565-13485 | 11378-11298 | 9191-9111 | 7004-6924 | 4817-4737 | 2630-2550 | 443-363 | 1745-1825 |
| 15 சுவாதி | 15671-15591 | 13484-13404 | 11297-11217 | 9110-9030 | 6923-6843 | 4736-4656 | 2549-2469 | 362-282 | 1826-1906 |
| 14 சித்திரை | 15590-15510 | 13403-13323 | 11216-11136 | 9029-8949 | 6842-6762 | 4655-4575 | 2468-2388 | 281-201 | 1907-1987 |
| 13 அஸ்த்தம் | 15509-15429 | 13322-13242 | 11135-11055 | 8948-8868 | 6761-6681 | 4574-4494 | 2387-2307 | 200-120 | 1988-2068 |
| 12 உத்திரம் | 15428-15348 | 13241-13161 | 11054-10974 | 8867-8787 | 6680-6600 | 4493-4413 | 2306-2226 | 119-39 | 2069-2149 |
| 11 பூரம் | 15347-15267 | 13160-13080 | 10973-10893 | 8786-8706 | 6599-6519 | 4412-4332 | 2225-2145 | 38-43<br>BC AD | 2150-2230 |
| 10 மகம் | 15266-15186 | 13079-12999 | 10892-10812 | 8705-8625 | 6518-6438 | 4331-4251 | 2144-2064 | 44-124 | 2231-2311 |
| 9 ஆயில்யம் | 15185-15105 | 12998-12918 | 10811-10731 | 8624-8544 | 6437-6357 | 4250-4170 | 2063-1983 | 125-205 | 2312-2392 |
| 8 பூசம் | 15104-15024 | 12917-12837 | 10730-10650 | 8543-8463 | 6356-6276 | 4169-4089 | 1982-1902 | 206-286 | 2393-2473 |
| 7 புனர்பூசம் | 15023-14943 | 12836-12756 | 10649-10569 | 8462-8382 | 6275-6195 | 4088-4008 | 1901-1821 | 287-367 | 2474-2554 |
| 6 திருவாதிரை | 14942-14862 | 12755-12675 | 10568-10488 | 8381-8301 | 6194-6114 | 4007-3927 | 1820-1740 | 368-448 | 2555-2635 |
| 5 மிருகசீரிஷம் | 14861-14781 | 12674-12594 | 10487-10407 | 8300-8220 | 6113-6033 | 3926-3846 | 1739-1659 | 449-529 | 2636-2716 |
| 4 ரோகிணி | 14780-14700 | 12593-12513 | 10406-10326 | 8219-8139 | 6032-5952 | 3845-3765 | 1658-1578 | 530-610 | 2717-2797 |
| 3 கார்த்திகை | 14699-14619 | 12512-12432 | 10325-10245 | 8138-8058 | 5951-5871 | 3764-3684 | 1577-1497 | 611-691 | 2798-2878 |
| 2 பரணி | 14618-14538 | 12431-12351 | 10244-10164 | 8057-7977 | 5870-5790 | 3683-3603 | 1496-1416 | 692-772 | 2879-2959 |
| 1 அசுவதி | 14537-14457 | 12350-12270 | 10163-10083 | 7976-7896 | 5789-5709 | 3602-3522 | 1415-1335 | 773-853 | 2960-3040 |



DIAGRAM SHOWING PRECESSION OF EQUINOXES
SAPTHA RISHI ERA
13-10-15261 B.C. FRIDAY
LORD RAMA'S BIRTH 17-1-10205 B.C. MON
LORD KRISHNA'S BIRTH 23-7-3185 B.C. WED
NIRRITI
INDRA
MITRA
INDRAGNI
VAYU
TVASHTRI
SAVITRI
ARYAMAN
BHAGA
PITARAH
SARPAH
APAH
VISVADEVA BRAHMA
VISHNU
VASAVA
VARUNA
EKAPAD
BUDHNYA
PUSHAN
MULAM
KETTAI
ANUSAM
VISAKAM
SVATHI
CHITTIRAI
HASTAM
UTTIRAM
PURAM
MACHAM
AVILYAM
PURADAM
UTTIRADAM ABHIJIT
SRAVANA
SRAVISHTA AVITTAM
SADAYAM
PURATTATHI
UTTIRATTADI
REVATI
DHANUSU
VIRICHIKAM
THULAM
KANNI
SIMHAM
KATAKAM
MAKARAM
KUMBAM
MEENAM
DAY OF BRAHMA 12160 SL YEARS
NIGHT OF BRAHMA 12160
27th MAHA YUGA
28th MAHA YUGA
KRUTHA YUGA 4864 YR
THRETHA YUGA 3648 YR
DWAPARA YUGA 2432 YR
KALI YUGA
13-10-15261 B.C. FRI
MAHA BHARATHA WAR 29-10-3139 B.C. FRI
BHEESHMASHTAMI 31-3-3138 B.C. MON
REAL KALI YUGA STARTED 20-12-4317 B.C. FRI
BY N.P. RAMADURAI
END OF KALI YUGA 27-12-3101 B.C. SAT




DIAGRAM SHOWING PRECESSION OF EQUINOXES
KRUTHA YUGA OF 29th MAHA YUGA
28-12-3101 B.C. SUNDAY
SRI ANDAL'S BIRTH 23-6-3005 B.C. TUESDAY
ADI SANKARA'S BIRTH 2-4-509 B.C. TUESDAY
NIRRITI
INDRA
MITRA
INDRAGNI
VAYU
TVASHTRI
SAVITRI
ARYAMAN
BHAGA
PITARAH
SARPAH
APAH
VISVADEVA BRAHMA
VISHNU
VASAVA
VARUNA
EKAPAD
BUDHNYA
PUSHAN
MULAM
KETTAI
ANUSAM
VISAKAM
SVATHI
CHITTIRAI
HASTAM
UTTIRAM
PURAM
MACHAM
AVILYAM
PURADAM
UTTIRADAM ABHIJIT
SRAVANA
SRAVISHTA AVITTAM
SADAYAM
PURATTATHI
UTTIRATTADI
REVATI
DHANUSU
VIRICHIKAM
THULAM
KANNI
SIMHAM
KATAKAM
MAKARAM
KUMBAM
MEENAM
DAY OF BRAHMA 12160 SL YEARS
NIGHT OF BRAHMA 12160
28th MAHA YUGA
29th MAHA YUGA
KRUTHA YUGA 4864 YR
THRETHA YUGA 3648 YR
DWAPARA YUGA 2432 YR
KALI YUGA
VIKRAMA SAKA 12-3-57 B.C. SUN
JESUS CHRIST'S BIRTH 25-12-4 B.C. FRIDAY
CHRISTIAN ERA 1-1-1 A.D. MONDAY
SALIVAHANA SAKA 19-2-79 A.D. SUNDAY
END OF KRUTHA YUGA 8-2-1765 A.D. FRIDAY
BEGINNING OF THRETHA YUGA 9-2-1765 A.D. SATURDAY
BY N.P. RAMADURAI
MOHAMMED NABY'S BIRTH 7-5-570 A.D. MONDAY
HEGIRA ERA 19-7-622 A.D. FRIDAY

1. Mythology to History Through Astronomy
   Published in 1980 at Pollachi
   by Dr. N. Mahalingam
2. Abithana Chintamani
   Published by J. Jetley
   for Asian Educational
   Service in 1994 at New Delhi.
3. Date of Adi Sankara
   By Sri. S. Neelakantan in 1978 at
   Madras
4. Date of Adi Sankara
   By Sri V.G. Ramachandran Advocate
   ISIAC 31, Poes Garden
   Madras in 1985
5. Indian Chronology
   By Mr. L.D. Samikkannu Pillai
6. Indian Ephemeris
   By Mr. L.D. Samikkannu Pillai
7. Astrological Magazines
   By Dr. B.V. Raman, Bangalore
8. Ocean of Theosophy
   By William Q Judge






# இஸ்லாமியர் போற்றும் 786ன் மர்மம்.

இசுலாமியர்களால் எழுப்பப்படும் மசூதிகளோடு அனைத்து இல்லங்களின் முகப்பிலும், எழுதப்படும் கடிதங்களின் தலைப்பிலும் இடம் பெற்று புனிதமெனப் போற்றப்படும் 786 ன் மர்மம் ஒரு புரியாப் புதிராகவே இருந்து வருகின்றது.

காரணமின்றிக் காரியமில்லை என்பதால், அதில் ஏதோ ஒரு பொருள் பொதிந்த உண்மை இருக்கத்தான் வேண்டுமென்று ஆராயத் தலைப்பட்ட போது, அது காலக் கணிப்பிற்கு வானியல் ரீதியாய் ஒரு ஒப்பற்ற அளவு கோலாகியுள்ள விந்தை வெளிப்படலாயிற்று.

இசுலாமியர்களுக்கு 12 சாந்திரமான மாதங்கள் ஒரு ஆண்டாகவும், அது போன்று 30 ஆண்டுகள் கொண்ட காலம் ஒரு சுற்றாகவும் உள்ளது. இந்த 30 ஆண்டுகளில் 360 சந்திரமான மாதங்கள் இடம் பெறுகின்றன.

இது போன்ற 786 சுற்றுகளுக்குரிய 23580 ஆண்டுகளில் இடம் பெறும் சாந்திரமான மாதங்கள் 282960.

நாம் 27 நட்சத்திரங்களுக்குரிய 27.32164563 நாட்களை ஒரு நட்சத்திர மாதமாகக் கொள்ளும்போது இது போன்ற305837 நட்சத்திர மாதங்களும், மேற்காணும் 282960 சாந்திரமான மாதங்களும் ஒரே அளவைப் பெற்றுவிடுவதால்தான் இந்த 786 பிறைக்கும் நட்சத்திரங்களுக்கும் இடையே பொலிவு தருகின்றது. பிறை மாதங்களையும் நட்சத்திர மாதங்களையும் இணைப்பது தான் இந்த 786க்குரிய தனிச் சிறப்பாம் என்பதோடு 1 முதல் 785 வரையுள்ள சுற்றுகளின் இறுதியில் இல்லாத ஒற்றுமையை நாம் 786 சுற்றுகளின் இறுதியில் தான் காண முடிகின்றது.

சாந்திரமான மாதங்கள் 29.530571 x 282960 = 8355970. 37016 நாட்கள்

நட்சத்திர மாதங்கள்27.32164563 x 305837 = 8355970. 13454 நாட்கள்



# வேதம் கூறும் பேதமில் வானியல்



உலகில் பூமி ஒருமுறை ரவியைச்
சுற்றிட முன்னூற் றறுபத் தைந்து
நாட்கள் மேலும் நாழிபதி னைந்து
இத்துடன் இருபத் திரண்டரை விநாடி
எடுத்துக் கொள்வதை விடுத்து நாமும்
ஏற்றது சற்றே கூடுதல் என்பதும்;
அனைத்துக் கோள்களும் ஒருநிலை பெற்று
மீண்டும் அந்நிலை எய்துங் காலமே
ஒருமகா யுகமென உணரா ததுவும்;
இருமகா யுகமே அயனுக் கொருநாள்
என்பதை எவரும் ஏற்க மறுத்ததும்;
திதிகள் முப்பதும் விண்மீன் இருபத்
தேழுடன் யோகம் இருபத் தேழும்
ஒருநூற் றறுபது ஆண்டுகட் கொருமுறை
கும்ப முதல்நாள் கூடிடுங் காலமே
மாக சைக்கிள் என்பதை மறந்ததும்;
இதுபோன் றெழுபத் தாறுசைக் கிள்கள்
இணையப் பெற்றதே மகாயுகம் மற்றும்
இருடிகள் எழுவரும் விண்மீன் ஒன்றில்
ஊர்ந்திடும் ஆண்டுகள் ஒன்பதொன் பதனை
ஒருநூ றென்றே உயர்த்திக் கொண்டதும்;
ஆகிய இந்த அரும்பெருந் தவறால்
இராமன் கிருஷ்ணன் இருந்திலர் ஆகி
ஏகின தமிழகத் தொன்மைச் சிறப்பே !

நா. பெ. இராமதுரை.




Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books
and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org






முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை